# விளம்பரம்.

இந்த அறிக்கையினால் சகலமானபேர்களுக்கும் பயிரங்கமாய்த் தெரிவிப்பது யாதெனில்:—இந்த ஸ்ரீகுருரஹஸ்யோபதேச புருஷார்த்த ஞானசிந்தாமணிநூல் ஆகிய சாஸ்திரத்தை, கிரந்தம், தெலுங்கு, இங்கிலீஷ், நாகரம், மலையாளம், இந்தப் பாஷைகளிலும் பாஷாந்தரப்படுத்தி, இந்தக் கிரந்தத்துக்குச் சொந்தக்காரரான ஷை யோகீஸ்வரரே அச்சுபோட்டு வெளிப்படுத்தத் தீர்மானித்திருக்கிறார்.

முதலாவது படத்திலிருப்பவை என்னவென்றால் :—சப்தரிஷிகள்-சுப்பிரமண்யர்-வீரபத்திரர்-குபேரர்-நாரதர்-அகஸ்தியர்-யமதர்மராஜா-பதஞ்சலி-தேவேந்திரர்-மஹாவிஷ்ணு-வாயுவு-சங்கராசாரியர்-வியாக்ரபாதரிஷி-விநாயகர் - தும்புரு - காமதேநு -இவர்கள் உண்டு அறியவும்.

இரண்டாவது படத்திலிருப்பவை என்னவென்றால :—சந்திரன் - சூரியன் - விநாயகர் - அகஸ்தியர் பதஞ்சலி - தருடாழ்வார - நாரதர் - பிருங்கி - சப்தரிஷிகள் - ஆறுமுக சுப்ரமண்யம் - இந்திரன் - வியாக்ரபாதர் - தும்புரு - ஆஞ்சநேயர்-ஜாதாதி நால்வர் - காமதேநு இவர்கள் உண்டு அறியவும்.

ஸ்ரீராஜராஜேஸ்வரி நாற்பத்து மூக்கோணசக்ர சிதம்பர ரஹஸ்யம் - இடப்பாகத்திலும் - ஆறுதார சிதம்பரச்சக்ரம் நூற்றிருபத்தைந்துவீடு - வலதுபாகத்திலும் உள்ள இரண்டு படங்களேயும் அறிக.

இந்த ஸ்ரீகுரு ரஹஸ்யோபதேச புருஷார்த்த ஞானசிந்தாமணிநூலினுடைய அநுபவாநந்தம் அநுபவிக்கவேண்டிய

மெய்யன்புள்ள பக்தகோடிகள், இந்த ஞானசிந்தாமணி நூலுக்குத் திரவுகோலாகவுள்ள இரண்டு சிதம்பரசக்ர - அர்த்தநாரீசவர இரண்டு படங்களும், இந்த ஞானசிந்தாமணிநூலும் ஆகிய இம்மூன்று சாதக அபூர்வ ரஹஸ்ய பொக்கிஷங்களையும் சென்னை முத்தியாலுப்பேட்டை இரேவுதுறை நாராயணசிராங்கு தோட்டத்தெருவிலிருக்கும் **ஸ்ரீ**கன்னியம்மன் கோயிலில் தற்கால மெழுந்தருளியிருக்கும் **யந்திர சுகவைத்திய சிங்கம் சி. கு. நடராஜபண்டிதராம்** இடத்திலும், **ஸ்ரீ**சைவசமயாசாரியர்களால் பாடல்பெற்றுள்ள திருவொற்றியூர் மஹா ஸ்தலத்தில் சிறப்புற்றோங்கும் மகான் பட்டினத்து ஸ்வாமிகள் மடாலயத் திருமாளிகையில், ஸ்தாபித்துள்ள சென்னை அகஸ்தியர் கூடம் ஜீவரக்ஷார்த்த மணிமந்திர யந்திர சுகவைத்திய சித்தர்சபையில் எழுந்தருளியிருக்கும், ஷட்சக்ரராஜராஜேஸ்வரி திருவருட்பிரகாச ஸாக்ஷாத்கூடஸ்த தக்ஷிணாமூர்த்தி கைலாயவர்க்கம் சதாசிவப்பிரம்ம சிவானந்த குருபரம்பரை **ஸ்ரீ**சற்குரு பிரணவ குஹவாசி வாலையானந்த சிவராஜ யோகிகளின் சாக்ஷி முன்னிலையில் ஷை யோகீஸ்வரர் பக்தரும், ஷை சபையின் காரியதரிசியும், மானேஜருமாகிய சி. கு. நடராஜபண்டிதராம் மூலத்திலும், தக்கவிதி நியமத்துடன் உபதேசக்கிரமமாய் வந்து பெற்றுக்கொள்ளலாம். இந்நூல் அருள் சாதகத்தோர்க்கே உபயோகமாகும்படி அச்சிடப்பட்டன.

இச்சபையைச்சேர்ந்த மருந்துப் பட்டிகளும், இந்நூலுக்கத்தியாவசியமான யோகமருந்தடங்கிய பட்டியும் உடனே வெளிப்படுத்தப்படும். இச்சபையைச் சேரவாரும் ஜகத்தீரே!

சுபம்.

சிவமயம்.

# முகவுரை.

திருக்குறள்.

"அகரமுதல வெழுத்தெல்லா, மாதிபகவன் முதற்றேயுலகு.
எண்ணென்பவேனை யெழுத்தென்ப விவ்விரண்டும்
கண்ணென்ப வாழுமுயிர்க்கு.

மேற்பிறந்தாராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றுணர்னைத்திலர்பாடு." எனவும்.

நீதிநெறி விளக்கம்.

"அறம்பொருளின்பமும் வீடும்பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டும் - உறுங்கவலொன்
றுற்றுழியுங்கைகொடுக்குங் கல்வியினூ உங்கில்லை
சிற்றுயிர்க் குற்றதுணை" எனவும்.

நாலடியார்.

"குஞ்சியழகுங் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சளழகு மழகல்ல - நெஞ்சத்து
நல்லம்யா மென்னும் நடுவுநிலைமையால்
கல்வி யழகே யழகு." எனவும்.

சான்றோர் கூறியுள்ளபடி, அறம்பொருளின்பம் வீடுவெ
ன்னும் நான்கு புருஷார்த்தங்களையும் அடைதற்குக்கல்வியே

உற்றதுணை. அக்கல்வியினும் சாகாக்கல்வியே மிகவு முயர்ந்தது.

என்பதனால்:—முழுமுதற் கடவுளாகிய பரமசிவன் அருளிச்செய்த வேதாகமங்கள் உபநிஷத்துகளால் உணர்த்தப்படும் சமயங்களுக்கெல்லாம் சிரசாய் விளங்கும் சன்மார்க்கம் சுத்தாத்விதமாம்.

இச்சுத்தாத்விதம் சொல்லும் பொருளுமாயிருக்கும். அப்பொருள்:— மெய்ப்பொருளாகிய பரமசிவமாயும், செல்வப்பொருளாகிய ஈஷணாத்திரயமாகவும், கல்விப்பொருளாகிய சொல் பிரபஞ்சமாகவு மிருக்கும். இச்சொல் பிரபஞ்சங் கொண்டே பொருளபிரபஞ்சத்தை அறியவேண்டியது. பொருட்பிரபஞ்சத்தில் பூரணமாய்க் கட்டுண்டிருப்பது மெய்ப்பொருளாகிய பிர்ம்ம சைதன்னியமாம். இப்பிர்மானுபவத்தை அடைவதற்குச் சரீரசுத்தியும், சுத்திக்கான விதிவிலக்காகும் யோகமும், ஒவ்வொருவருக்கும் இன்றியமையாது என்பதை 'ஞானிகள் விபகாரம் லோக உபகாரம்" எனவும் "தாமின்புறுத லுலகின்புறக்கண்டு காமுறுவர் கற்றறிந்தார்" எனவும் "உடம்பாரழியி லுயிராரழிவர், திடம்படமெய்ஞ்ஞானம் சேரவுமாட்டார். உடம்பைவளர்க்கு முபாயமறிந்தே, உடம்பை வளர்த்தே னுயிர்வளர்த்தேனே." எனவுங் கூறிய பிரமாணங்களை இந்நூலாசிரிய சிவராஜயோகீஸ்வரர், அனேக குருபாரம்பரைகளைத் தெரிசித்து அனுபவத்துக்குக்கொண்டு வந்திருக்கும் தமதுகைவல்லிய நவநீதத்தை ஜீவகாருண்ணியமாய்ப்

பக்குவிகளாகிய சகல உத்தமசிஷ்யகோடிகளுக்கு உபதேசிக்க யுக்தி முதலிய தந்திரங்க ளிருந்தாலும், சுருதி அவசியம் வேண்டு மென்பதாகத் திரட்டி அதன்வழியாக ஒவ்வொரு ஜீவரும் நான்குபுருஷார்த்தங்களை அடையவேண்டியது தான் உயர் ஜென்மமெடுத்ததற்குப் பிரயோசன மாகுமெனச் செய்தார்.

ஔவை வாக்கியம்.

" தருமம் பொருள்காமம் வீடெனு நான்கு
முருவத்தாலாய பயன்."

"ஈதலறந் தீவினைவிட் டீட்டல் பொருளெஞ் ஞான்றும்
காதலிருவர் கருத்தொருமித் - தாதரவு
பட்டதேயின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்பவீடு "

என்னும் பிரமாணங்களைக்கொண்டு குரு உபதேசத்தால புருஷார்த்தங்களு மடையவேண்டிய திருப்பதனல், சாகாக் கல்வியைப்போதிக்கும் இந்நூலுக்கு

ஸ்ரீ அகண்ட பரிபூரண சச்சிதானந்தசாக்ஷாத்கார நித்யானந்த உண்மையை விளக்கும் சாதுசங்க ஜீவகா

**நூற்பெயர்.** ருண்யதேஜோந்மய கருணாநிதி ஸ்ரீ கூடஸ்த சதாசிவ பிரம்ஹோபதேச பிரம்ஹவித்யாசித்திக் கிரமயோக பிரம்ஹாநுபூதி கைவல்லிய உபநிஷத் பாதஞ்சலி யோகசூத்ர கீதா ரஹஸ்ய மகாவாக்கிய புருஷார்த்த அநு

சரஹ ஜீவன்முக்தி அநுபவ சிவாநந்த ஸ்ரீ சிவயோகதீபிகை வியாக்யான நூல் என்றும், ஸ்ரீ குருரஹஸ்யோபதேச புரு ஷார்த்த ஞானசிந்தாமணி நூல் என்றும், இந்த மஹாரஹ ஸ்யகிரந்தத்திற்கு மஹரிஷிகளால் நாமம் பிறந்தது.

இச்சிந்தாமணி நூலானது, 1-வது அந்தக்கரண பூஜாவிதி

நூலின் பிரிவு — 2-வது சதுராங்கவிதானம், 3-வது அஷ்டாங்க அந்தரங்கவிதானம், 4-வது அத்துவைத பீடிகை, 5-வது உபதேசக்கிரமம் 6-வது ஹம்ஸ

சராஜயோகம், என ஆறுபடலங்களாகப் பிரித்துள்ளது. ஆறு படலங்களும் ஸ்ரீ சதாசிவப்பிரமங்களையில் தன்னிடத்திலிரு ந்தபடியே நிச்சயித்து நிருபித்திருப்பவையாக மகாரிஷிகள் முனீஸ்வரர் சித்தபுருஷர்களுக்கும், அநுக்கிரஹித்த சுகாநுபவ ரஹஸ்யத்தை விளக்குகின்றன சாங்கியயோகம், தாரகயோ கம், அமனஸ்கயோகமென்கிற ஹம்சராஜயோகம், ஆகிய மூன்றுமே இவ்விதம் ஆறுணபடியால் ஆறுபடலங்களாக இதி ல் நிச்சயித்து இருக்கிறார்கள்.

ஸ்தூல பஞ்சீகரணம்: — பிரிதிவு ஸ்தூலதத்வம், சரிதை, பிரம்ஹா, இருக்குவேதம் சாக்ஷி; சூக்ஷமபஞ்சீ

நூற்பெயரின் காரணம். — கரணம்:— அப்பு சூக்ஷமதத்துவம், கிரியை விஷ்ணு, யஜுர்வேதம்-சாக்ஷி; காரணபஞ்சீக ரணம்: தேயுகாரணதத்வம், யோகம், ருத்திரன் சாமவே

தம் - சாக்ஷி, மஹாகாரண பஞ்சீகரணம்: வாயு மஹாகாரண தத்வம், ஞானம், மஹேஸ்வரன், அதர்வணவேதம் சாக்ஷி; மோக்ஷ பஞ்சீகரணம்: ஆகாய மோக்ஷதத்வம், மோக்ஷம், சதாசிவம், மோக்ஷவேதம் சாக்ஷி: ஆகையால் மகாபஞ்சகர்த்தாக்களாலேயும் இந்த ஞானசிந்தாமணி நூலுக்கு அநுபவசாக்ஷிகளே யறிக.

ஸ்ரீஷட்சக்ர ராஜராஜேஸ்வரியின் திருவருட் பிரகாச ஸாக்ஷாத் கூடஸ்த தக்ஷிணாமூர்த்தி கைலாய

நூலாசிரியர். திருமூலவர்க்க ஸ்ரீசதாசிவ பிரம்ஹ-சிவாநந்த குருபாம்பரை கிருபாஸஹாயம் பெற்ற ஸ்ரீகடூரா பிரணவ குஹவாசி பரமானந்த சிவராஜயோகியின் சாக்ஷிமுன்னிலையில், உலகோபகாரமாகவே, ஸ்ரீசற்குரு சதாசிவ யோகீஸ்வர ரென்று நாமந்தரித்த பிரம்ஹநிஷ்டரால் ரஹஸ்யோபதேச சுவாநுபவ நிலை அநுக்கிரஹார்த்தம், இந்த ஸ்ரீகுருரஹஸ்யோப தேசமெனும் புருஷார்த்த ஞானசிந்தாமணி நூல் வெளியிடப்பட்டது.

இந்த மஹாவேதரஹஸ்ய முடிவான ஸ்ரீகுருரஹஸ்யோபதேச புருஷார்த்த ஞானசிந்தாமணி நூலின்மேல் சந்தேகமிருக்கிறபேர்களுக்கு இந்த வியாக்யான கிரந்தத்திற்குச் சாக்ஷியாற்றுமை மனசிற்கும் அறிவிற்கும் கீழ்க்குறித்த முனீஸ்வரர்கள் ரிஷீஸ்வரர்கள் சித்தபுருஷர்களாலும், நிர்ணயித்திருக்கிற நூல்களையும் சாக்ஷியாகவே விவரிக்கிறோம்; ஆகையால் சந்தே

சம் நிவிர்த்தி செய்துகொள்ளவும் அந்த மேற்கோள் முதனூல்களாவன:—

1. ராஜ யோக பாஷ்யம்.
2. கீதா சூத்ர ரஹஸ்யம்
3. யோக தாராவளி.
4. பாதஞ்சலி யோக சூத்ரம்
5. பாவநோபநிஷத்து.
6. சதோபநிஷத்து.
7. தேவிபாகவதம்
8. பிரம்ஹாண்டபுராணம்.
9. சீதாராம ஆஞ்சநேய சம்வாதகிரந்தம்.
10. உபநிஷத்து மஹாவாக்ய ரஹஸ்யம்.

ஆகிய முதநூல்களைக் கூறி பித்தது என்று அறிக,

ஸ்ரீ ஷட்சக்ர சஞ்சாரிணி ஆகிய ராஜராஜேஸ்வரி திருவருள் சிவோஹாநந்த ஞானம் என்கிற மநோந்மணியும், புஷ்பமணி என்கிற பாஞ்சோதி சந்தித்த இடத்தில் மோக்ஷம் என்கிற ஐக்யத்தில் அநுபவநிலைகண்டு, சந்தேகம் என்கிற அஞ்ஞாநசோகத்தைநிவிர்த்திக்கப்பெறலாம். இதற்குமனம் சாக்ஷி. மற்றெல்லாவிஷயத்திற்கும் சர்வேஸ்வர கர்த்தாவாகிய சதாசிவமே சாக்ஷியாம்.

இந்த மஹாபுருஷார்த்த ஞாநசிந்தாமணிநூல் ஆகிய மஹா குருவியாக்யாந கிரந்தாஹஸ்ய கைவல்ய நவநீதத்தைஅநு

பலிக்கவேண்டியவர்களுக்கு இன்றியமையாக் கருவிகள் மூன்று உண்டு. அவை எவையெனில்:—

I. ஸ்ரீ சிவாநந்த பிரம்ஹாநுபவ சாதக தத்துவ ஐக்ய சாக்ஷிக்கு அண்டபிண்ட பிரமாண்ட கோள பஞ்சிகரண ஷடாங்கஷட்சக்ர சிவசக்தி அர்த்தநாரீஸ்வர சிதம்பரகூடஸ்தரஹஸ்ய ஆருடதார அநுபோக பிரத்தியக்ஷ சாக்ஷி ஆருடதார நின்ற திருக்கோல ஸ்வரூபத்தோடு, ஸ்ரீ அகண்ட சிதம்பர ரஹஸ்ய ஸ்ரீ ராஜராஜேஸ்வரி நாற்பத்து முக்கோணசக்ரம் இடைகலையாகியும், பிங்கலையில் சிதம்பர சக்கிர நூற்றிருபத்தைந்து வீடாகியும் அமைந்துள்ள சக்கிரமாகியும், விளங்குகிறபடம்-I

II. ஸ்ரீ அகண்ட மோக்ஷ ஐக்ய கூடஸ்த தக்ஷணாமூர்த்தி அர்த்தநாரி சிவசக்தி ஷண்மோன ஷட்சக்கிர சிதம்பராலய நிஜஸ்வரூப தெரிசனை ஸ்ரீ அகண்டமோக்ஷ சாக்ஷி ஆருடதார தக்ஷணாமூர்த்தி திருக்கோலத்தோடு, ஸ்ரீ அகண்ட சிதம்பர ரஹஸ்ய ஸ்ரீ ராஜராஜேஸ்வரி நாற்பத்து முக்கோண சக்ரம் இடைகலையாகியும், பிங்கலையில் சிதம்பரச் சக்கிர நூற்றிருபத்தைந்துவீடாகியும் அமைந்துள்ள சக்கிரமாயும் விளங்குகிறபடம் I.

III. இந்த இரண்டு அர்த்தநாரீஸ்வர மோக்ஷபடங்களுக்குரிய ஸ்ரீ சிவயோக தீபிகை வியாக்யானநூல் என்கிற ஸ்ரீகுருரஹஸ்யோபதேச புருஷார்த்த ஞானசிந்தாமணிநூல் I.

இந்த மோக்ஷவேதரஹஸ்யார்த்த அநுக்கிரகத்திற்கே, ஸ்ரீ குருரஹஸ்யோபதேசபுருஷார்த்த ஞானசிந்தாமணி நூலானது மஹாபுருஷார்த்த குருவாகியும், இந்த உண்மையை விசாரிக்கிறவனே சிஷ்யனாகியும், இவை இரண்டிற்கும் சாக்ஷி யோக கருமகிரியா யோகஞான மோக்ஷசூத்திர காரணகாரிய யந்திரங்களாகிய இந்த இரண்டு பிரத்தியக்ஷ ஸ்படிகமாகிய ஸ்ரீ காசி ராமேஸ்வர மோக்ஷபுருஷார்த்த கைவல்ய முகதிரகஸ்ய பூஜா சுகஅனுபவ படங்களென்றே அறிந்து, சேரவாரும் ஜகத்தீரே.

இந்த மஹாபுருஷார்த்த வியாக்யான மோக்ஷரஹஸ்யபுஸ்தகத்தாலும், இந்த இரண்டு புருஷார்த்த ஆத்தசாரீஸ்வரமகா சிதம்பர சக்கிர ரகஸ்ய பூஜாபடங்களாலும், மஹாமோக்ஷ புருஷார்த்தத்தை அபேக்ஷிக்கிற சர்வஜீவ மநுமாணிடகோடிகளுக்கும் இகத்தில் இஷ்டமான இடத்தில் சுவர்க்காதிபோகங்களும், பரத்தில் மோக்ஷசாம்பிராஜ்யங்களும் ஆகிய இரண்டும் உள்ளங்கைக்கனி, கண்ணாடியில் பிரத்தியக்ஷபிரதிபிம்பம்போல, அநுபவாநந்தத்திற் பிரகாசிக்கும்.

பூகோள வட்டத்திலுள்ள இந்த மஹாஜம்புத்வீப மானிடகோடிகளாகிய முதலாரியர் வர்க்க ஆஸ்திக ஷிந்து ஆரியவர்த்தம் ஆகிய இந்தியா க்ஷேத்திரத்திலே சுருதி, ஸ்மிருதி, இதிஹாசம், புராணம், தர்க்கம், வியாகரணம், மீமாம்ஸம் உபநிஷத்து, மஹாவாக்கிய ரஹஸ்யங்களும் ஹிமசேது பரி

யந்திரம் பிரகாசித்துவிளங்கும். இந்த அநுபவசாக்ஷியாகவே மஹாபுருஷார்த்த ஸம்புட குருஹஸைய வியாக்யா ஸ்ரீ குரு ரஹஸ்யோபதேச புருஷார்த்த ஞானசிந்தாமணிநூலும், இந்த இரண்டு மஹாஸசிதம்பர ரஹஸ்ய அர்த்தநாரீச மோக்ஷபடங்களும், அநுபவசாக்ஷியாகவே பிரகாசிக்கும்.

ஸ்ரீ சிவாங்கீஸ்வரகுரு பரமகுரு பரமேஷ்டிகுரு பராபரகுரு நால்வருமே சாக்ஷி. இதற்கு சிவோஹம் சர்வமங்களம் ஓம் தத் ஸத்.!!

---

## விசேஷக்குறிப்பு.

இந்நூல் மிகவருமையும் பெருமையுமான தாகைபாலிதற்குச் சாதகங்களான வைத்தியம், வித்தை சம்பந்தமும், வித்தை ஆகமவேத சம்பந்தமும், ஆகமவேதம் அக்ஷரசம்பந்தமும், அக்ஷரம் மந்திரசம்பந்தமும், மந்திரம் யந்திர சம்பந்தமும், யந்திரம் வரிவடிவுசம்பந்தமும், வரிவடிவு நாத சம்பந்தமும், நாதம் பிந்து சம்பந்தமும், பிந்து கடவுள் சம்பந்தமும், கடவுள் கடந்தமாஞானி களுள் உறைபவராதலால் ஞானிகள் சம்பந்தமும், ஞானிகள் ஜீவன் முத்தராகிய சித்தர்களாய்ச் சச்சிதானந்த சம்பந்தம் பெற்றிருந்த

லின், ஜீவரக்ஷாமிர்த்த சித்தர்சபையில் ஒவ்வொருவரும் சேர்ந்து, அச்சபைக்கு நாயகமாயிருக்கும் சிவராஜயோகிகளவர் வாலையானந்த சாமிகள் சாக்ஷி முன்னிலையில் ஷை சபை காரியதரிசி, மந்திரசகவைத்திய சிங்கம் சி. கு. நடராஜ பண்டித சாமிகளால் அவரவர்கள் பிரவிட்பணியோடு சேர்ந்து வருத்தாநின்ற சட்டசட்டக வியாதிகளை நீக்குவான் தொடங்கினர் மேற்கண்ட மணி மந்திர யந்திர யோக ஔஷதங்களை அனுபவிக்க வேண்டியதோடு ஷை மணிமந்திர யந்திர யோக ஔஷதங்களின் உண்மைகளை யறிய விரும்பும் புத்திமான்களுக்கு ஒவ்வொன்றும் தெரியப்படுத்தப்படும். இத்தகைய வேற்பாட்டிற்குக் தேவையை யெய்யாதுளும். பொருள் சகாயமும் வேண்டியதாகையால் இந்நூலால் வரும் ஊதியத்தைக் கொண்டும் ஷை சென்னை அகஸ்தியர் சுட சித்தர்சபையை விர்த்திச்செய்ய வேண்டி நிச்சயித்திருக்கிறது.

இச்சபையைப்பற்றிய விவரங்களியாவும், சபைக்காரியதரிசி, சி. கு. நடராஜபண்டித சாமிகளால், நேரில் தெரியலாம். சபைகாரியதரிசி சபை மெம்பர்களுடன் ஆங்காங்கு சபையாரது இந்த மருந்தின் உபயோகத்தைப்பற்றிப் பிரசங்கித்துப்பேசுவார்.

உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரங்கள்.

காஞ்சீபுரம் மகாவித்வான்

கச்சபாலையர் மாணாக்கரும்,

சென்னை அகஸ்தியர்கூடம்

ஜீவரக்ஷார்த்தத் தர்மசபை அக்கிராசனாதிபதியுமான

சைதாப்பேட்டை வித்வான்,

## திரு. நாராயணசாமிமுதலியாரவர்களால்,

இயற்றிய

**நிலைமண்டில வாசிரியப்பா.**

கருமாலுந்தித் திருமலருதித்த
வொருநான்முகத்தோ னுயிர்கருப்பையிற்
சுவையுதிக்கச் செய்ததுபோல
பூவமேலோடரிய வளவிலாக்கரம்
பிறக்கவெண்ணிப் பெட்புடன்முன்னம்
சிறக்குநாவலந் தீவுக்குமுந்தி
நீர்வளநிலவள சீரிலசெல்வமோ

டார்வளமெல்லா மழகுற்றுவிளங்கக்
கருவூரெனுமோர் கன்னியைப்படைத்துப்
பெருவூரெலாமவட் பெற்றிடச்செய்த
காரணத்தாலே கருவூரெனுமோர்
பூரணநாமம் பொலிந்தவப்பதியில்
நாராயணன்மக னான்முகன்முசமதின்
பாராயணஞ்செயப் பண்டைநாட்பிறந்த
அரும்பரசுராம வந்தணர்குலமெனும்
பெருங்கடறவத்தால் பெற்றிடுபானு
சிவனைவழிபடுஞ் சீர்புட்பதந்தன்
அவனைவழிபடு மருட்கௌ பாதர்
தன்னைவழிபடுஞ் சங்கரர்தாளிற்
பின்னைவழிபடும் பிரமாதராப
மன்னைவழிபடு மாண்புடைப்புலவர்
பன்னுகவிராஜ பண்டிதனுதி
அருந்தவக்குரவர்த மருமரபுச்சோர்
பெருந்தவக்குமரனைப் பேருலகுய்ய
வந்தவதரித்த வரமிகுஞானி
அந்தமிலருங்கலை யாவையுமுணர்ந்தோன்
வேதவேதாந்த விழுப்பொருட்கெல்லா
மோதிடும்பொக்கிஷ முபநிடதப்பொரு
ளெல்லாம்வாய்மடுத் தேப்பமிட்டவன்
வல்லாளன்கை வகுத்தபம்பரம்போ

முரியநற்சிகிசைக ளுக்கமொடுசெய்ய
ஜீவரக்ஷார்த்த சித்தர்சபையெனுஞ்
தாவிலகத்தியர் தருமநற்கூட
மாவலாய்ச்சென்னையி லமைத்துநடத்துஞ்
பாவலரெண்ணம் பலித்திடமேலுஞ்
சித்திபெறவேண்டியோர் சித்தரபிமானம்
பெற்றிடச்செய்த பெருந்தவமேயுருக்
கொண்டுவந்தெங்கடங் குறையறக்களையுந்
தண்டுதலில்லாத் தவராஜசிகாமணி
சிவபாலானந்த சிவராஜயோகியா
மமைமிலாஞான வருட்கடலறிஞன்
தரணியில்மாந்தர்க்குத் தகுந்ததநுவொடு
கரணபுவனங் கதித்தபோகமும்
பெற்றமதநிலை பேறுதவாடி
உற்றதரும முயரர்த்தகாம
மோக்ஷமென்னு மொழிபுருடார்த்தச்
சூக்ஷமமறியாச் சுழன்றுழன்றுழன்றே
எடுத்ததேக மீடேறுது
வெடித்தகமறில் விட்டபாற்போ
லாவதற்கிரங்கி யருளைமேற்கொண்டு
சிவகாருண்யஞ் சிறந்ததவத்திற்
காவதாமட்டாங்க வரும்யோகவிபரமும்
பாவாபாவ பசுநிலைமேன்மையும்
ஆராதார வருநிலைதன்னையும்

சோராதவாசிசெய் சோதனைதன்னைய
மவத்தையிரண்டு மான்மாவிரண்டும்
தவத்திருநட் பமுந் தருநாடிபத்தும்
திரிபுடியியல்புந் தீனர்கள்பேறும்
தரிசனப்பலமுந் தத்துவமசிவாக்ய
மளவிலாத்வைத வருமைபாற்கடலை
உளமெனுங்குடத்தி லூக்கமொடுமதித்து
ஞானமாந்தீயில் நன்குறக்காய்ச்சி
மோனமாங்குளிரில் முழுதுமேயாத்துத்
தூய்மையாம்பிரைதனைத் துளியாக்குததி
வாய்மையாந்ததிதனை வயங்கமகிழ்ந்தே
உரைவைராக்கிய வொளிர்நிலமத்தால்
புரையிலாக்கடைந்து புருஷார்த்தஞான
சிந்தாமணியெனுந் திகழ்ஞானநூலை
நந்தாதரிய நவநீதமாகச்
சித்தாந்தமெல்லாஞ் சுத்தாந்தமாகச்
சத்தாம்வேதாந்த நித்தியாநந்தமாய்ச்
சிந்தாகுலமுறுஞ் சீவர்களுய்யத்
தந்தான்றிரட்டித் தனைஜீவரக்ஷார்த்த
சித்தர்சபைக்கோர் சீர்காரியதரிசி
சுத்தசைவசுசீலன் "மந்திர
சுகவைத்தியசிங்க" சுகுணநடராஜ
பகருநற்பண்டிதன் பரமதயாளி

திகம்பரியம்பிகைத் திருவடிக்கன்ப
னகமகிழ்ந்தின்னூ லச்சிறக்கிசைய
எழுதிமுடிக்க யிரும்புவிதன்னில்
பழுதிலாக்கன்னடப் பகர்குலத்திலன்
சிறந்தலிங்கப்பசெம்மல் செய்தவத்தில்
பிறந்தநற்சுதன் பெரியரிற்பெரியன்
வீரசைவ விரிகடலுயிறு
தீரவுத்தண்ட ஜயசிங்கவேறு
கொண்டலளக்குங் சோலையினிலுயர்ந்தோன்
தண்டுதலில்லாத் தயைபொறைதானன்
சத்தியவாய்மை தனிலரிச்சந்திரன்
வித்தைசக்கரத்தியன் விஜயத்தில்விஜயன்
அறம்பொருளின்பமே யடைவதுவீடெனத்
திறம்படவுலகத்தோர் தெள்ளிதினுணரச்
சென்னையிலுள்ள திகழச்சுசாலைகட்
கன்னியாயப்பமுறை யகிலமும்புகழும்
* எம்பெரெஸ்ஸாப்பிண்டியா வெனும் பெயர்பெற்ற
தம்பிரஸ்தன்னில் தயையுடன் பதித்தான்
எப்பாவலரு மேத்திடுசெண்முக
வப்பாவாகு மரியவிற்பனனே.

* Empress of India Press.

சென்னை அகஸ்தியர் கூடம்

ஜீவரக்ஷார்த்த சித்தர்சபை காரியதரிசி

"மந்திர சுகவைத்திய சிங்கம்."

## சி. கு. நடராஜபண்டிதரவர்களியற்றிய

### வெண்பாக்கள்.

வாலையா னந்தசிவ மாயோகி சொற்றிட்ட
நாலாம் புருஷார்த்த நிலைகமெய்- நூலாகுஞ்
சிந்தா மணிக்குநிகர்ச் சீரியருஞ் செய்தறியார்
வந்தப் பெரியோரை வாழ்த்து. (க)

மற்கடசப் பற்றதுபோல் வாலையா னந்தரெனுஞ்
சற்குருவைச் சந்ததமுஞ் சந்தித்தா—னற்குலத்திற்
றோன்றிப் புருடார்த்தந் தொல்லுலகிற் பெற்றவராஞ்
சான்றோர்க ளேயறிவார் சார்ந்து. (உ)

### விருத்தங்கள்.

மூலமுதலாதாரமுச்சுடராய்பொருளே
முத்திநிலையீதென்றறிவிக்கவந்த
வாலையானந்தசிவராஜாலிங்கயோகி
வையகத்திலறியாதமாந்தர்களுந்தேற
மாலைநிகர்புருடார்த்தஞானநிலைசிந்தா
மணியென்னவோர்நூலையிங்கியற்றினானை

வேலைநிகரவர்புகழையெந்நாளும்பேச
　　வினையெல்லாம்விடைகொண்டுவெகுண்டுருண்டுபோமால்.

## வேறு.

உலகுபுகழ்குருலிங்கசங்கமெனவாழும்
　　உயர்வீரசைவநெறியுறுதியினைக்கொண்டே
யிலகர்ஜிலிங்கப்பகோமான்றன்சுதனு
　　யெய்ந்தநம்ஷண்முகப்பச்செல்வன்மிகவோர்ந்து
பலகலையிலீதுயிர்க்குப்பக்குவமென்றாய்ந்து
　　பலவாகவெழுதாதவெழுத்ததனைப்பரப்பிக்
குலபுத்திரபவுத்திராதிதம்மரபுகுலவக்
　　குருலிங்கஜங்கமத்திற்குறியாகவாழ்ந்தான். (௪)

## வேறு.

பூமங்கையுயர்சோக்கம்பாமங்கையருளேக்கம்பொலிவுற்றென்
　　பூரணவளத்தினைடுபெற்றுளானிவனைப்பூவிற்பேச[றும்
மாமங்களாகாரசென்னையம்பதியரசர்வந்தித்தேத்த
　　மகபதியைநிகரர்ஜிசண்முகப்பேர்வாய்ந்தவள்ளலானோன்
நேமங்கள்மிகுந்தபுருஷார்த்தசிந்தாமணியாஞ்ஞானநூல்தான்
　　நிலத்திடவேயச்சிட்டுப்புலவோர்கள்தெரிசிக்கநியமித்திட்
டான், சேமங்கணிறையஷ்டலட்சுமியுடன்வாழுந்திறத்தவன்
　　றன், தெவிட்டாதிருக்கவப்பெரியோர்கள்திருவுள்ளஞ்செய
　　　　வேண்டுமால். (௫)

சென்னை அகஸ்தியர்கூடம்.

ஜீவரக்ஷார்த்த சித்தர்சபை "பண்டிதாத்தனம்."

## கோவளம் சிதம்பரப்பிள்ளையவர்களா லியற்றப்பட்ட

### விருத்தங்கள்.

கூட்டி வைக்கின் குருவிடத் தந்தைதாய்
சாட்டி வைப்பரவருங் கலை நிலை
நாட்டி னிற்கினின் றைதனுளத் திருந்
தாட்டி வைப்ப ரவரவர்க் கானதே. (க)

### வேறு.

விந்துவினிற்றோன்றிவிளைதத்துவங்கண்மேன்மேலும்வீறி டாது, விதித்தவட்டாங்கயோகச்செல்வஞ்சோபானவிளைவி லேற்றுத், தந்தவுயர்புருடார்த்தஞானசிந்தாமணியைத்தயவினு லே, தரணிதனில்வசிப்பவர்கடழைத்தோங்கவன்புட.னேதந்த ளித்தான், சிந்தையினையொருவழிப்படுத்திவாசிப்பரியைச்செ லச்சிவத்தைச்,தெரிசிக்குமொருவித்தையெளிதாகக்காட்டியரு ள்தேர்ந்துவாழு, மெந்தையெனுவாலையாநந்தசிவயோகியினை யென்றுமுன்னி, யிணையடிகண் முடிசூடியருணடிமனமாறவே த்துவாமால். (உ)

இஃது
ம - ள - ள - ஸ்ரீ,
திருமழிசை-சந்தசாமிமுதலியார் குமாரரும்,
சொர்க்காபுரம்,
இராமலிங்கத்தம்பிரானவர்கள் மாணாக்கருமாகிய

## வடிவேலுமுதலியாரியற்றியது.

### பதினான்குசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

துதிமேவு சருவூர்செய் நற்றவத் தாற்றோன்று
தோமின்மெய்ப் பொருளை நாடுஞ்
சுகிர்தமடம் வாலையா னந்தயோகீஸ்வரன்
றொகுதரும மாகிநான் கைத்
ததிமேவு மவர்களுட் டெளியும்வண மினியசெந்
தமிழ்வசன மாவியற்றித்
தருமதற் குரியபெயர் புருடார்த்த ஞானசிந்
தாமணியெ னப்புனைந்தான்
றிதிமேவு சிவமட் சார்ந்த சித்தச்சபையி
றிசழ்மந்த்ர சுகவைத்ய
சிங்கமா நடராஜ பண்டிதன் னூலினைச்
செவ்வனே சோதித்த பின்
மதிமேவு வீரசை வாசார வுத்தமன்
வளமைமிகு லிங்கப்பவேண்
மகிழ்சுதன் சண்முகக் குரிசிலச் சிட்டேவரும்
வாழ்த்தவெளி யிட்டனனரோ.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---*---

ஹரி ஓம்

ஸ்ரீ பரப்பிரம்மணே நம.

ஸ்ரீ குரு ரஹஸ்யோபதேசமெனும்

# புருஷார்த்த ஞான சிந்தாமணி நூல்.

## பாயிரம்.

### திருவருள் ஆதிகாப்பு.

ஒழியாத சுழிமுனையில் ஒடுங்கிநல்ல
உற்கலை வாசிசிவ யோகத்தேகி
வழியானதுறையறிந்து மவுனங்கொண்டு
மகத்தான அண்டவரை முடிமேற்சென்று

தெளிவான ஓங்காரவடிவேல் கொண்டு
தெளிந்து மனதறிவாலே தாயைக்கண்டு
வெளியான பரவெளியில் தன்னைக்கண்டு
வேதாந்த சத்தி சித்தி ஆகிகாப்பே. (1)

ஆதியிலே பராபரத்திற் பிறந்தசத்தம்
அருவுருவாய் நின்ற பரசிவமுமாகிச்
சோதி யென்ற சிவனிடமாய்ச் சத்தியாகித்
தொல்லுலகில் எதுவகையாந் தோற்றமாகி
நீதியென்ற அறிவதனால் தானாய்நின்று
நிறைந்தபரிபூரணமாய் நிஷ்களமுமாகிச்
சாதியென்ற சத்திசிவம் அருள் தன்னாலே
சண்முகமுங் கணபதியுந் தானுண்டாச்சே. (2)

ஆதியந்தமில்லாத சின்மயத்தின் பாதம்
அகண்டபரி பூரணமாம் ஆத்தாள் பாதம்
சோதிநிற மாகினின்ற கணேசன் பாதம்
சொல்தனக்கு மெட்டாத சுடரின் பாதம்
வீதியென்ற பராபரத்தி நந்தி பாதம்
வேதாந்த சாஸ்திரத்தின் வெளியின் மார்க்கம்
சோதியெனு மன்றதனில் நடனஞ் செய்யும்
சுடரொளியின் பாதமது காப்புத்தானே. (3)

திரிமூர்த்தி தேவர்முதல் மனிதரோடு
சிவயோகம் பெற்றிருந்த மார்க்கந்தன்னைப்
பிரியமுட னெனைத்தொழுது கேட்டபிள்ளாய்
பின்கலைய மிடைகலையு மாறும்போது
அறிவுடனே சுழிமுனையில் மனத்தைவைத்தே
அசையாமலொரு நினைவாய்க் காக்கும்போது
குறியான சிவயோகம் சித்தியாச்சு
கோடி ஜன்மம் சித்தனைப்போ லாகலாமே. (4)

கோடி யென்றால் ஒருகோடி காலமல்ல
கோடான கோடியடா கொலுவில் தானே
ஆடிநிற்குஞ் சிவசத்தியிரண்டு பேரும்
அன்புடனே உனைத்தூக்கி மடியில் வைப்பார்
சாடிவிடுங் குரங்கதுபோல் சாடிடாமல்
தாயான மதியிரவி நடுவில் நில்லு
பாடிவிட்டேன் சிவயோக மார்க்கந்தன்னைப்
பார்த்தறிந்து அஞ்ஞான பகையைவெல்லே. (5)

பகையான கருவி யெல்லாம் அடங்கிப்போகப்
பகருகிறேன் உபாயமொன்று லகுவாய்ச்சொல்வேன்
திகையான பலநூலின் மார்க்கங்கண்டு
சிற்றின்பயோகத்தில் மயங்கிடாதே

தகையேதுமில்லாத உபாயஞ்சொல்வேன்
தாரணியி லிந்தமுறை சூக்ஷம்சூக்ஷம்
வகையான சுழிமுனைக்குள் வாசிபூட்டி
வையகத்தி லுலகத்தோடொத்துவாயே. (6)

ஓம் தத் ஸத் !!

பாயிரம் முற்றிற்று.

ஸ்ரீ குருஞானஸம்போபதேசமெனும்,

# புருஷார்த்த ஞானசிந்தாமணிநூல்.

## க-வது அந்தக்கரண பூஜாவிதிப்படலம்.

ஸ்ரீ சதாசிவ யோகீஸ்வரரென நாமந்தரித்த ப்ரம்மநிஷ்டர், சிவயோக தீபிகையென்கிற யோகசாஸ்திரத்தில் அந்தக்கரண பூஜாவிதான மார்க்கத்தை நிச்சயப்படுத்தி நிரூபிக்கின்றார்: — அதாவது.

(1) பரம யோகீஸ்வரர்களுடைய மனதானது, தாமரை புஷ்ப வாசனையைக் கிரஹிக்கும் வண்டுபோலவும், காரணத்ரயங்களுக்குக்காரணமாகவும், அவ்யயமாகவும், சகுண-நிற்குண தத்வஸ்வரூபமாகவும், ஜநந மரணங்களில்லாத சதாசிவ லிங்க ஸ்வரூபமாகவும் விளங்குவதால்; ஸ்ரீபரமகுருவை நமஸ்கரித்து, அந்த ஸ்ரீசதாசிவயோகீஸ்வரர் சிவயோக தீபிகையாகிற ஸ்ரீ குருஞானஸம்போதேசமெனும் புருஷார்த்த ஞானசிந்தாமணி கிரந்தத்தை இரசனை பண்ணுகிறார்.

(2) ஸ்ரீ குருப்பிரசாதத்தினால் சிவயோக ப்ரம்மபதத்தை நன்றாயறிந்து, அஞ்ஞானிகளாயிருக்கிற பெயர்களுக்குச் சுஞ்ஞானம் போதிக்கும் பொருட்டு, சிவயோகதீபிகை யென்கிற இந்தக்கிரந்தம் வெளியிடப்பட்டது

(3) சிவதத்வ ஸ்வரூப மறிந்தவர்களுக்குள் உத்தமனை சிஷ்யனை நோக்கி, சிவயோக பரமாய் நிச்சயமாக இருக்கிறதைக் குருபக்தி விசேஷத்தினால் நமக்குத்தோற்றுகின்றமட்டும் உனக்குச் சொல்லுகின்றோம்

(4) சிவயோகமாவது: — மந்திரயோகம் - இலயயோகம் - அஷ்டாங்கயோகம - இராஜயோகம்-இந்தப்படி நான்குவிதமாகப்பரமேஸ்வரனாலே போதிக்கப்பட் டிருக்கிறதென்று முநீஸ்வர் இருஷீஸ்வர் சித்தபுருஷர் முதலியோர்களும் சொல்லுகிறார்கள்.

(5) இவற்றுள் மந்திரயோக மென்பது அனேகவிதமாயிருந்தாலும் முக்கியமாய், நான்குவிதமாம்: — அவை, பிரணவமாகிய ஏகாக்ஷரமென்றும், பிந்துநாதமிரண்டுடன் மௌனாக்ஷரம் சேர்ந்திருப்பதாகிய திரியாக்ஷரமென்றும், பஞ்சபூத கர்த்தரூபமாகிய நகராதி யகாராந்த மட்டுமுள்ள ஐந்தக்ஷரத்துடன், பிந்து நாதபீஜம் சேர்ந்திருப்பதாகிய பஞ்சாக்ஷரமென்றும், பஞ்சாக்ஷர பஞ்சகர்த்தாக்களோடு தாரகசத்தியுஞ் சேர்ந்திருப்பதாகிய ஷண்முகஸ்வரூபமேஷடாக்ஷரமென்றும் அறிந்து இவையே சப்த்தகோடி மஹாமந்திரங்களுக்கும் தாயகமெனத் தேர்ந்து இவற்றுள் ஒரு மந்திரத்தைப்பிராணயாமங்களுடன் குரு முன்னிலையில் மனதுக்குவரத்தேர்ந்து மோக்ஷார்த்தமாய் ஜபித்து வருவதுதான் மந்திரயோக மென்னப்படும்.

(6) இலயயோகமாவது:— மானசமாகிய மனோத்தியானத்தில் நின்று அம்மனம் புத்தி சித்தம் ஒன்றாய் பிரளாமல் வாயுவோடேயாவது அல்லது நாதத்தோடேயாவது லீனமடையப் பண்ணிச் சாதித்துவருவதுதான் இலயயோக மென்னப்படும்,

(7) அஷ்டாங்கயோகமாவது:—அஷ்டாங்கமாகிய மனம் புத்தி - சித்தத்துடன் பஞ்சப்புலன்களையும் - தசவிதமுத்திரைகளாகிய அஷ்டாங்க கர்மங்களால் மூல ஒட்டியான ஜாலாந்தரங்களாகிற பந்தத்திரயங்களினால் சமானவாயுவை யுடையவனாக அல்லது கேவலகும்பகத்தை யுடையவனாகவாவது சாதித்து வருவது தான் அஷ்டாங்கயோக மென்னப்படும்.

(8) இராஜயோகமாவது:— அந்தரங்கம், மத்தியங்கம். பிரசாங்கமாகிற மூன்று லக்ஷணங்களிலேயும் பிர்ம்ம சாக்ஷாத்காரத்தை அடையச் செய்வதும், அல்லது ஞானத்தினாலேயாகிலும் மனதுக்கு விருத்திகளில்லாம லிருக்கச்செய்வதும் சம்பூர்ண சமபாவனையோடு எலலாச் சராசரங்களிடத்திலுமிருக்கச்செய்வதுமாய்ச் சாதித்துவருவதுதான் இராஜயோக மென்னப்படும்.

(9) இந்நான்கு யோகங்களும் — கிரமமாக ஒன்றுக்கொன்று அதிக விசேஷமாகவே யிருக்கும்; இவைகளில் இராஜயோக மொன்றுமட்டும் ஆதியந்தமாக உத்தமமுடையது.

(10) அந்த இராஜயோகமாவது:—சாங்கியமென்றும்-தாரகமென்றும் அமனஸ்கமென்றும் மூன்று விதங்களாகவிருக்கும்.

(11) சாங்கியமாவது: — பூதபஞ்சீகிருதமான இருபத்து நாலு தத்துவங்களுடைய குறிப்பையறிகிறது.

(12) தாரகமாவது:—பாஹ்ய முத்திரைலக்ஷ்யமறிகிறது.

(13) அமனஸ்கமாவது: — அந்தர முத்திரைலக்ஷ்ய மறிகிறது.

(14) சாங்கியயோகத்தைப் பார்க்கிலும் தாரகயோக மதிகம், தாரகயோகத்தைக்காட்டிலும் அமனஸ்கயோகமதிகம். அமனஸ்கயோகமென்ற சிவராஜயோகம், சகல யோகங்களுக்கும் மேலானது.

(15) இராஜ யோகத்திற்கும் சிவயோகத்திற்கும் சமம் பேதமேயல்லாமல் ஸ்வானுபோகம் ஒன்றேயாகும் ஆனபடியினால் தான் மஹரிஷிகள் யாவரும் சிவயோகமே முக்கியமென்று சொல்கிறார்கள்

(16) பிர்ம்மானுபவத்தை யப்பியாசிக்க வேண்டியவர்களினுடைய புத்திக்கு, விவேகமும் ஞானமும் விருத்தக்கும் பொருட்டுச் சொல்லப்பட்ட சிவயோகமும் சிவபக்தியும் நித்தியானுஷ்டானமாக, தன்னிடம் எப்போது மிருக்கவேண்டியது.

(17) அந்த சிவயோக அப்பியாசமானது, ஐந்துவிதங்களாகவிருக்கும். அதாவது :—சிவத்தியானம், சிவபக்தி, சிவவிரதம், சிவார்ச்சனை, சிவஞானமாக இருக்கும்.

(18) சிவார்ச்சனையைப் பண்ணுதவர்கள் சிவஞான முள்ளவராகமாட்டார், அவர்கள் அறிவில்லார் மிருகஜன்மமாவார்.

அவர்கள் சதாகாலமும் சம்சாரசாகரமே சத்தியமென்று சுழ ன்று திரிவார்கள்.

(19) பூர்வ இருஷிகளால் நிச்சயிக்கப்பட்ட ஸத்திய ஸ்வரூபமான நித்யதத்துவத்தை உனக்குச்சொல்லுகிறோம்.

(20) அதாவது, சகல தேவதா சொரூபமாய், சகல பூதமயமாய், சர்வமும் ஞானமயமாய், சகலதத்துவங்களுக்கும் உத்தமோத்தமமாய், சகலதேஜஸுக்கும் தேஜஸாய், சர்வஜ கத்துக்கும் ஆனந்தசொரூபமாய், மஹாமாயையோடு கூடிச் சகுணமாயும், மாயையை நீக்கி நிஷ்களமுமாயு மிருக்கும்.

(21) கேவலமென்றும், பரமென்றும், பரமாத்மாவென் றும், பிர்ம்மமென்றும் வெகுவித நாமங்களுடனே கூடிச் சர் வாந்தர்யாமியாய்ச் சிற்பிரகாசமான சிவமொன்றுண்டு.

(22) அந்தச் சிற் சொரூபமானது உண்டென்னுமில்லை யென்னுமிரண்டுக்கும் அதீதம்; மனோவாக்குக்கு எட்டாதது; வெகுவித வர்ணமானதுடன் வெகுவித ரூபங்களுமானதா யிருக்கிறது.

(23) அப்படிப்பட்ட சிவனிடத்திலேயிருந்து சக்திபி றந்தாள். அந்தச்சக்தியானது சாந்தியென்றும் அதீதையென் றும் பராசக்தியென்றும் அம்பிகையென்றும், பலநாமங்க ளுடன் கூடிச் சங்கைக்கடங்காத குணங்களுடனே சிவாஞ் ஞையினால் பிரகாசித்துக்கொண்டிருக்கும்.

(24) அந்தச் சக்தியே பஞ்சப்பிரம்ம ரூபமாய்க்கொண்டு ஐந்துவிதங்களுமாகும். அந்தப்பஞ்சபூதசத்தியினாலே சகலபிரபஞ்சங்களும் பிறந்து சர்வகாலமும் விளங்கிவருகின்றன.

(25) அந்தச்சத்தியானது ஆதியில் சதாசிவத்துடனே கூடிக்கொண்டு ஆகாசத்தில் விளங்கிற்று. அந்தச் சதாசிவனிடமிருந்து ஈஸ்வரன்பிறந்து வாயுவிலே பிரகாசிக்கப்பட்டான்.

(26) அந்த ஈஸ்வரனிடமிருந்து உருத்திரன்பிறந்து அக்கினியிலே பிரகாசிக்கப்பட்டான்.

(27) அந்த உருத்திரனிடமிருந்து மஹாதேஜஸான நாராயணன்பிறந்து ஜலத்தில் பிரகாசிக்கப்பட்டான்.

(28) அந்த விஷ்ணுவினிடமிருந்து பிர்ம்மதேவன் பிறந்து பிருதிவியில் பிரகாசிக்கப்பட்டான்.

(29) இந்தப் பிரகாரம் ஆதிப்பராசக்தியிலிருந்து தம்தம் சொரூபத்துக்குத் தக்கதான பஞ்சமூர்த்திகளும் உற்பவித்தார்கள்.

(30) இதில் நிவிர்த்திகலை, பிரதிஷ்டாகலை, வித்தியாகலை சாந்திகலை, சாந்தியாதீதகலை என்று ஐந்து நாமங்களுடைய பஞ்சசக்திகளும் பிர்ம்மதேவன் முதற்கொண்டு கிரமமாகப் பஞ்ச மூர்த்திகளுடனே கூடியிருப்பார்கள்.

(31) இந்தச் சக்திகள் ஐவகையோரும் சிவாஞ்ஞையினாலே மஹாப்பிரகாசமாக விளங்கிவருகிறார்கள். இந்தப்பிரகா

சத்துக்குட்பட்ட பிரமதேவர்கள், தேவர், மனிதர், விலங்குகள், பக்ஷிகள், ஊர்வன, நீர்வாழ்வன, ஸ்தாபரங்கள் என்று சொல்லப்பட்ட எழுவகைத்தோற்றமும், உற்பீஜம், அண்டஜம், ஸ்வேதஜம், ஜராயுஜம் என்னும் நான்குவித யோனிபேதங்களாலுண்டாகி ஜகமுழுவதும் நிறைந்திருக்கின்றன.

(32) இவற்றுள்:- உற்பீஜமாவது, புல், விருக்ஷம், பர்வதம், நதிகள், சாகரங்கள், தடாகங்களாகிற சகல ஸ்தாவரங்களாம் அண்டஜமாவது, முட்டைகளிலிருந்து பிறந்து விருத்திகளாகிற சர்வ பக்ஷிகளாம். ஸ்வேதஜமாவது-புழுக்கத்திலுண்டாகும் கிருமிமுதலியவைகளாம். ஜராயுஜமாவது கர்ப்போற்பத்தியில் ஜனிக்கின்றமனிதர்கள், மிருகங்கள் முதலியனவாம்.

(33) இப்படி நான்குவிதபேதங்களாலுண்டாகின்ற ஸ்தாபர சங்கமங்களாகிய ஜகமும் ஜீவன்களும் அந்தச் சிவனாலே உற்பத்தியானபடியினாலே சர்வமும் சிவமயமென்று சொல்லப்பட்டது.

(34) எவனொருவன் இப்படிச்சொத்த லக்ஷணங்களுடனே கூடியிருக்கிற சகல ஜகத்தும் தானாகி விளங்கிக்கொண்டு ஸ்வரூபமயமாகிச் சூரியமண்டலம்,சந்திரமண்டலம், அக்கினிமண்டலங்களாகிற மண்டலத்திரயங்களினுடைய தொழிலில் விளங்குகிற சிவனைக் குருப்பிரசாதத்தினாலே செவ்வையாகவறிந்து, மலத்திரயங்களையும்போக்கிப் பூஜித்துத் தியானம்பண்ணுவானே அவன்மோக்ஷத்தை அடைவான்.

(35) அந்தச் சிவஞானமாவது சகுணமென்றும், நிற்குணமென்றும், இரண்டுவிதங்களாக இருக்கும். முதலில் சகுணத்தை யனுஷ்டித்துவந்து பிற்பாடு நிற்குணத்தை யனுஷ்டிக்கவேண்டியது.

(36) சகுணமாவது.—உள்ளும் புறம்பும் வசித்துக்கொண்டு வெகுவித பேதங்களாகவிருக்கும். நிற்குணமாவது - களங்கமற்ற மஹா ஆகாசத்தைபபோல் மனசுமுதலான இந்திரியாதிகளால் அளவிடப்படாமலிருக்கிற ஸ்வரூபமாகவிருக்கும்.

(37) இந்தச் சகுண நிற்குண பேதங்களிரண்டும், குருமுகத்தில் பிரகாசிக்கும். குருமுகத்தைத்தவிர வேறு எந்த ஸ்தலத்திலும் அறியக்கூடாவாகையால், மோக்ஷத்தை யபேக்ஷித்த பெயர்கள் எப்போதும் குருவைப்பூஜிக்கவேண்டும்.

(38) நரஜன்மிகளுக்கு ஆயுசும், ஆரோக்கியமும். ஐஸ்வர்யமும், வித்தையும், கீர்த்தியும், சுவர்க்கமும், மோக்ஷமும், இவைகளெல்லாம் குருப்பிரசாதத்திலைல்லாமல் வேறுவிதமாய் அடையச் சாத்தியங்களாகாவாம்.

(39) உத்தமலக்ஷணங்களுடனே கூடிக்கொண்டிருக்கிற சர்வஞ்ஞரான குருவை, மனம்வாக்கு காயங்களாகிற திரிகரணங்களாலேயும் சாக்ஷாத்காரமான பரமசிவமாகப்பாவித்துப் பூஜிக்கவேண்டியது.

(40) அந்தக்காரணத்தைக் கொண்டே குருமுகமாய்ப் போதிக்கப்பட்ட பத்ததியோடு கூட்டிக்கொண்டு சிவபரமாத்

மாவை எவனொருவன் பூஜிப்பானோ அவனுக்குத் தருமம் - அர்த்தம-காமம் - மோக்ஷங்களாகிற சதுர்வித புருஷார்த்தங் களும் உள்ளங்கமாயிருக்கும்.

(41) குருவென்பவர் - சுபகுரு, பரமகுரு, பரமேஷ்டி குரு வென மூவகையாவர். இவருள், சுபகுருவாலுபதேசி த்த மார்க்கமாக, ஒருகாலம், இருகாலம், மூன்றுகாலமாக லும் தன் சக்திக்குத் தக்கதாகச் சிவனைச் சிற்பிரகாசமாக பூஜைபண்ணவேண்டியது.

(42) அந்தச் சிவபூஜையானது, அந்தரங்கபூஜையென் றும், பாஹ்யபூஜையென்றும் இரண்டுவிதங்களாகவிருக்கும். இவற்றுள் அந்தரங்கபூஜை உத்தமமாகிய பூஜையாகும். பாஹ் யபூஜை ஸாமான்ய பூஜையாம்.

(43) சத்புருஷர்களான சாதுக்கள் அத்யந்தம் பிரகாச மாகவும் சாந்தஸ்வரூபமாகவு மிருக்கிற பரமசிவனைத் தங்கள் மனதிலே ஆத்ம ஸ்வரூபமாகவு மிருக்கிற ஜீவன்தான் சத்திய மென்று நிச்சயப்படுத்திக்கொண்டு சதாகாலமும் தியானம் செய்து பூஜிப்பார்கள். அற்பபுத்தியுள்ள அவிவேகிகளாயி னோர் பாஹ்யமாகிய தாம்பிரம், தாரு, மிருத்திகைமுதலி யவைகளில் பிரதிமெய்ரூபமாகப்பாவித்து, பாஹ்யத்திரவி யங்களாகிற கந்தபுஷ்பாக்ஷதைகளால் பூஜிப்பார்கள்.

(44) அந்தரங்கபூஜையாவது. முன்னே தன் ஹிருத யத்தில் ஒரு தாமரைப்புஷ்பமாகப்பாவித்து, அந்தப்புஷ்பத் துக்குச் சர்வகாலமும் சுகதரமாகவேயிருப்பது கந்தம், ஸுஞ்

ஞானம் என்னாளும் நித்யம், அஷ்டைசுவர்ய வைராக்கியமே கர்ணிகை, சந்திரவர்ணமே ரூபம், உருத்திரனே கேசரங்கள், இந்தலக்ஷணங்களோடே கூடின கமலத்தின் மத்தியில்விளங்குகிற சின்மயனை பரமசிவத்தைப் பூஜைபண்ணவேண்டும்.

(45) பரமசிவத்தை எந்தரூபமாய்த் தியானம்பண்ண வேண்டுமென்றால், பிரசன்னமுகமும் சாந்த ஸ்வபாவமும், பதினாறுவயதுக்கு மிகுந்தஸ்வரூபமும் கோடி மன்மதரூபமுமாயுள்ள இலக்ஷணங்களுடன் இருக்கிற திவ்வியமூர்த்தியாகத் தியானம்பண்ணவேண்டும்.

(46) பின்னும் சதுர்ப்புஜமும், மானும், மழுவும், காளகண்டமும் அபயஅஸ்தமும், அர்த்தசந்திரனைச் சிரசில் தரித்துக்கொண்டு சதாகாலமும் பதினாயிரம் பூரணசந்திரனுடைய பிரகாசத்துக்குமேல் கொண்டதாகவிருக்கிற ஸ்வரூபமாகத் தியானிக்கவும்.

(47) பின்னையும் அந்தப் பரமாத்மாவுக்குத் திவ்விய வஸ்திரமும் திவ்யாபரணமும், திவ்யபுஷ்பமும், திவ்வியசந்தமும் தரிப்பித்திருக்கிறதாய்ப் பாவிக்கவும்.

(48) பின்னும் திரிநேத்திரங்களோடு திரிகுணங்களுக்குக் கர்த்தாவாகவும், மலத்திரயங்களைப் போக்கிவைக்கிறவனாகவும், வாமபாகத்தில் பார்வதிதேவி வசித்துக்கொண்டிருக்கிறதாகவும் பாவிக்கவும்.

(49) மேலும் கற்பகவிருக்ஷத்தின்கீழே வேதிகையின் மேலே நவரத்தின சிம்மாசனத்தின்மேரில் எழுந்தருளியிருப்பதாய்ப் பாவிக்கவம்.

(50) பின்னையும் அந்தச்சிவன் எப்படிக்கொத்தவரென்றால், ஏகவஸ்துவாயும், சமானரகிதராயும், நாசரகிதராயும், ஸர்வவியாபியாயும், விஷ்ணுகாந்தராயும், ஜஞர்த்தஹராயும், மோக்ஷத்துக்கு அதிகாரியாயும், சிந்தனைக்கு எட்டாதவராயும் ஜனன மரணமில்லாதவராயும், இப்படிக்கொத்தவ ரென்று நிர்ணயிக்கப்படாதவராயும் ஆதிமத்தியாந்த ரஹிதராயுமுள்ள சச்சிதானந்த வஸ்துவென்று அறியவேண்டியது.

(51) இப்படிக்கொத்த சிவபரமாத்மாவை ஹிருதயத்தில் தியானம்பண்ணி நிச்சயமனதோடு கூடிக்கொண்டு அந்தரங்க உபாயங்களாலே சாவதானமாய்ப்பூஜிக்கவேண்டியது.

(52) அப்படிப்பட்ட சிவனைப்பூஜிக்கிற கிரமமாவது சமமாகிற ஜலத்தினாலே யபிஷேகம்பண்ணி, சர்வவஸ்துவும் பரிபூரணபாவகமான வஸ்திரத்தைத் தரிப்பித்து, இச்சா ஞானகிரியைகளாகிற மூன்று சத்திகளையும் யக்ஞோபவீதமாகச் சமர்ப்பித்து, சுத்தவித்தையாகிற கந்தத்தைத் தரிப்பித்து, பூததயையாகிற அக்ஷதையும் சமர்ப்பித்து, பிரகாசமான பத்தியாகிற புஷ்பசதையும் சமர்ப்பிக்கவும்.

(53) மனம், புத்தி, சித்தம், அகங்காரங்களாகிற அந்தக்கரணங்களைத் தூபமாகக்கொடுத்துச் சுரோத்திரமுதலான ஞானேந்திரியங்களைத் தீபமாகவிளக்கி, சுகதுக்கவர்ஜிதமான ஜீவனை நைவேத்தியமாகச் சமர்ப்பிக்கவும்.

(54) சத்துவ, ரஜஸ், தமோகுணங்களாகிற மூன்றையும், தாம்பூலமாகவும், பிராணனை நமஸ்காரமாகவும், இந்தப்

பிரகாரமாகப் பரமேஸ்வரனுக்கு அந்தரங்கத்திரவியங்களாலே அந்தரங்கத்தில் பரமாத்மஸ்வரூபனான ஜீவனைப் பக்தியோடேஸமர்ப்பித்துப் பூஜிக்கவேணுமென்று குருமூர்த்தியானவர் அந்தரங்கபூஜாவிதானம் உபதேசித்தார்.

(55) இந்தப்பிரகாரம் அந்தரங்கத் திரவியங்களாலே பூஜிக்கிறமுறைமை யெப்படிக்கொத்ததென்றால், சமஸ்தபாபங்களையும்போக்கிச் சர்வதுக்கங்களையும் நீக்கி, சிவபக்தியை விருத்தியடையப்பண்ணி மனதைப்பவித்திரம் பண்ணுகிறதாகையால், சர்வைஸ்வர்யங்களைக் கொடுக்கிறதாகவும், யோகத்தையும் ஞானத்தையும், பிரகாசிப்பிக்கிறதாகவும் இருக்கிற இந்த அந்தக்கரணபூஜையைப் பண்ணச்சொல்லித் தீவிரபக்தியையுடைய சிஷ்யனுக்குக் குருமூர்த்தியானவர் அனுக்கிரஹம் பண்ணுகிறார்.

(56) பின்னும் இராஜோபசாரங்களால் தன் அந்தரங்கத்தில் பரமாத்மஸ்வரூபகனான பரமசிவத்தைச் சாவதானமாக விருந்து கொண்டு மானசிகமாய்ப் பூஜித்துவரவேண்டியது.

இவ்விதமாய் அந்தரங்கபூஜாவிதானமாகிற முதலாவது படலம் சம்பூர்ணம்.

முதலாவது படலம்,

முற்றிற்று,

ஸ்ரீ பரப்ரம்ஹணே நம:.

# ஸ்ரீ குருரஹஸ்யோபதேச புருஷார்த்தஞானசிந்தாமணி நூல்.

## உ-வது சதுரங்க விதானப்படலம்.

அவதாரிகை:

ஸ்ரீ குருமூர்த்தியானவர் சிஷ்யனுக்கு அந்தரங்க பூஜாவிதானத்தைப் பூர்த்திசெய்து மேலும் உபதேசிக்கத்தொடங்கினர்.

(1) பரிசுத்தமுடைய சிஷ்யனே! இந்தச்சிவபூஜாவிதான மானது பூர்வத்தில் பெரியோர்களால் வேறொருமார்க்கமாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிற விதிக்கிரமம் கோசரமாகச் சொல்லப் படும். அதையும் உனக்கு இப்போது சொல்லுகிறோம் கேள்.

(2) யோகத்தினாலே ஞானமுண்டாம். ஞானத்தினாலே யோகமுண்டாம். இவ்விரண்டையும் சாதிக்கிறதற்குச் சரீரம் வேண்டுமாகையினாலே, இப்பூமியில் பெரியோர்கள் பூதநாத சரீரங்களை கற்பாதி முதலியவைகளால் சுத்தித்து இரக்ஷித்துக் கொள்வார்கள்.

(3) முக்கியமாய்ச் சரீரங்களைக் காப்பாற்றிக்கொள்ளச் சிலேத்துமத்தை நாசம் பண்ணவேண்டும். பிராணவாயு கும்பகத்தில் ஸ்திரமானால் சிலேத்துமத்தை நாசஞ்செய்யும். அந்த வாயுவைக் கட்டாமல் சிலேத்துமத்தை ஜயிக்கக்கூடாது. வாயுதாரணையினாலே அதை நாசம்பண்ணிச் சரீரத்தை நிறுத்திக்கொள்ளவேண்டியது.

(4) யோகம சாதிக்கிற பெயர்கள் சிவயோகமே சாதிக்கவேண்டும். அதற்குச் சாதனமானது ஹடயோகமாகையால் ஆரம்பத்தில் ஹடயோகத்தைச் சாதிக்கவேண்டும். அதைச் சொல்லுகின்றோம் சாவதானமாய்க்கேள்.

(5) அந்த ஹடயோகத்துக்கு எட்டு அங்கங்களுண்டு அந்த அஷ்டாங்கயானது, அந்தரங்க சதுரங்கமென்றும் பாஹ்ய சதுரங்கமென்றும் இரண்டுவிதமாகவிருக்கும். அப்படிப்பட்ட இயமாதி அஷ்டாங்கங்களினாலே சிவபூஜை பண்ணவேண்டும்.

(6) அதாவது:—இயமநியமாதி குணங்களினாலே ஆத்தும சுத்திபண்ணி, தன் வசமான சுகாசனங்களில் ஒரு ஆஸனத்தில் ஸ்திரமாக விருந்துகொண்டு, பிராணாயாமமென்கிற தீர்த்தத்தினாலே திவ்வியலிங்கத்துக்கு அபிஷேகம்பண்ணவும். இதுதான் பாஹ்யசதுரங்க விதானமென்று சொல்லப்படும்.

(7) அந்தப் பரமேஸ்வரனுக்கு இந்திரியநிக்ரஹமே சரீரமாகவும், தியானமேபுஷ்பங்களாகவும், இஷ்டமானதாரணையே

தாபமாகவும், சுத்தசமாதியே மஹாநைவேத்தியமாகவும் சமர்ப்பிப்பது; அந்தாங்க சதுராங்கவிதானமென்று சொல்லப்படும்.

(8) இந்த அஷ்டாங்கயோக மார்க்கத்தினாலே சதாகாலமும் அந்தரங்கத்தில் பரமேஸ்வரனைச் செவ்வையாய் பூஜைபண்ணவும். பாஹ்யோபசாரங்களாக எவையுண்டோ, அவையனைத்தையும் அந்தரங்கோபசாரமாகப்பண்ணவேண்டியது.

(9) இந்தப் பிரகாரமாகவே அந்தரங்கத்தில் அஷ்டாங்கயோகமார்க்கத்திலே அபிப்ராயமான பரமேஸ்வரனை எவனொருவன் பூஜிக்கிறானோ, அவனே சதாசைவனாம். அவனே வித்வானாம். அவனே யோகீஸ்வரர்களில் உத்தமனாம். அவனே ஞானசிரேஷ்டனுமாவான். அவனேபிரமஞ்ஞான பிராயணனாம். அவனே பிரமவித்தமனாம்.

(10) இதில் இயமம் பத்துவிதங்களாக முனீஸ்வரர்களாலே சொல்லப்படுகிறது. அது எப்படியென்றால், மிதமான ஆகாரமும், நித்திரையும் யோகத்துக்குத் தகுந்த ஆஸநமும், தாரணையை நிறுத்துகிற கிரமமும், ஜீவகாருண்ணியமும், பொய்சொல்லாமலிருப்பதும், தீவிரபுத்தியோ டிருப்பதும், சந்தேகமில்லாமல்நிச்சயத்தை யடைந்திருப்பதும், மௌனத்தையும் மனோலயத்தையு மடைந்திருப்பதும் ஆகிய இப்பத்தும் இயமமென்று சொல்லப்படும்.

(11) நியமமாவது சர்வதா சந்தோஷமாயிருப்பதும், சம்பூர்ண பாவனையும், தபோ நிலைமையும், விரதாதிகளும், சிவபூ

ஜைசெய்வதும், ஜபம்பண்ணுகிறதும், சமாதிசெய்வதும், யோகசாஸ்திரங்களைக் கவனிப்பதும், ஸத்பாத்திரங்களில் தானம் பண்ணுவதும் குருசேவையும் ஆகிய இப்பத்தும் நியமமென்று சொல்லப்படும்.

(12) இந்தப்பிரகாரம் இயமம் பத்து, நியமம்பத்து, ஆக இருபது இலக்ஷணங்களிலேலே ஸ்திரமான புத்தியோடே கூடினவனாய்க்கொண்டு ஆத்துமசுத்தி பண்ணவேண்டும்.

(13) ஆஸனங்களானவையனேகமுள அவைகளில் சிலவற்றைச்சொல்லுகிறோம். 1. வீராசனம். 2. ஸ்வஸ்திகாசனம். 3. சித்தாஸனம். 4. மதாந்தரசித்தாசனம். 5. பத்மாசனம். 6. மதாந்தரபத்மாசனம். 7. முக்தபத்மாசனம். 8. பந்தபத்மாசனம், 9. கூர்மாசனம, 10. உத்தானகூர்மாசனம், 11. பத்ராசனம், 12. பூதாசனம், 13. குக்குடாசனம், 14. கோமுகாசனம், 15. தனுராசனம், 16. மயூராசனம், 17. கருடாசனம், 18. சிம்மாசனம, 19. கபோலாசனம், 20. திட்டியாசனம், 21. பச்சிமதாணுவாசனம். 22. போகாசனம், 23. பூர்வதாணுவாசனம், 24. அற்பகாசனம், 25. காமதஹுனசன முதலியனவாம்.

(14) இந்த ஆஸனங்களில் சிரேஷ்டமானதைச் சொல்லுகிறேன்கேள். இவற்றில் கிரகஸ்தாளுக்குப் பத்மாசனமே சிரேஷ்டமாம். மற்றவர்களுக்குச் சித்தாசனமே சிரேஷ்டமாம். கிரஹஸ்தாள் யோகிகள் முதலெல்லாருக்கும் ஸுகாசனமே

சிரேஷ்டம். இந்தப்படி மூன்று விதங்களாகச் சொல்லப்படு கின்றன.

(15) பிரசித்தமான ஆஸனங்களின்னு மனேகமுண்டு. அவைகளில் தனக்கு இஷ்டமான ஆசனங்களிலிருந்து, ஏகா ந்த ஸ்தலத்தை யாஸ்ரயிக்கவேணும்.

(16) ஏகாந்த ஸ்தானத்திலே மனோகரமான ஒரு மடத் தை கற்பிக்கவேணும். அந்தமடமானது எப்படியிருக்கவேண் டியதென்றால்: ஒரு இடத்திலும் வெளியில்லாமல்வாசல்விட்டு அதற்குச் சுற்றுப்பிராகாரமு மிருக்கவெளியில் கூடமும் தாழ் வாரமும் இருக்கவேண்டியதுடன் மஹா பரிசுத்தமாகவு மிருக் கவேண்டும்.

(17) பின்னும் அந்தமடத்திலே மஹா நல்ல வாசனைக ளுள்ள புஷ்பங்களாலே பந்தல்போட்டு மஹா மிருதுவான மெத்தையுமிட்டதி லிஷ்டமான ஆஸனத்தோடேகூட இருக் கவேண்டும்.

(18) மேலும் அதில் சாம்பராணி தூபவாசனையோடு பசுவின் கோமயத்தால் மெழுகியு மிருப்பதோடு, உலர்ந்தசமி த்துவகைகளும், நல்ல கந்தமூலாதிகளும், விபூதி ருத்திராக்ஷ மும், தர்ப்பமும் கிருஷ்ணாஜினமும், சுத்தான்னம் தீர்த்தமும், மூலிகைத்திரவியங்களுமுதலாகிய வஸ்துகள் சம்பூர்ணமாயும் மனோஹரமாயுஞ் சேமித்திருக்கவேண்டும்.

(19) இப்படிக்கொத்தவிடத்தில் ஸதாகாலமு மிருந்துகொண்டு நியமமான மனதுடன் கூடித் தன்னிருதயத்திலிருக்கிற பரமாத்தும ஸ்வரூபமாகிய சதாசிவமூர்த்தியைச் சாவதானமாய்ப் பூஜிக்கவேண்டும்.

(20) அதாந்தச பூஜாவிதானமான தென்னவென்றால், சொல்லுகிறேன் கேள்! ஆதியிலே கேவல கும்பகத்தினாலே வாயுவை நிரோதம்பண்ணி, பிராணாயாமமெனகிற தீர்த்தத்தினாலே சிற்பிரகாசமான சதாசிவமூர்த்தியை நீ அபிஷேகம் செய்யவேண்டும்.

(21) பிராணாயாமமாவது, பிராக்கிருதமென்றும், வைக்கிருதமென்றும், இரண்டுவிதமாகவிருக்கும். இவற்றைத்தவிர அடங்கிநிற்பது, கேவலகும்பக பிராணயாமமென்று சொல்லப்படும். அதுவே மகா உத்தமமானது.

(22) பிராக்கிருதமென்பது - பிராணவாயுவானது தன்னிச்சையின்படியே போக்குவரத்தாகச் சகல ஜனங்களுக்கும் நடந்துவருகிறதைத்தான் பிராக்கிருதமென்று சொல்லப்படுகிறது.

(23) வைக்கிருதமாவது - சாஸ்திர மார்க்கத்தினாலேயும் ஆசார்யர்களுடைய அநுக்கிரக விதிக்கிரமத்தாலேயும் உள்ளும்புறம்பும் வியாபகமாகப் பிரவேசித்துவருகிற பிராணவாயுவை, இரேசக பூரககும்பகங்களாகிற கிரமமறிந்துவாயுவை நிறுத்திக்கொள்வதென்று சொல்லப்படும். இவ்விருவிதமும் எந்த மஹாத்மாக்களுக்கு க்ஷணமாத்திரத்தில் சித்தியா

மோ அதுவே கேவலகும்பக பிராணயாமமென்று சொலலப் படுவ தென்றால், நினைத்தமாத்திரத்திலே பிராணவாயு மனதோடு கூடிப் போக்குவரத்தில்லாமல் அடங்கி நிற்கிற தென்று அறிந்துகொள்வது.

(24) முன்சொல்லிய பிராக்கிருத அஜபாரூபமான மந்திரயோகமென்று சொல்லப்படும். வைக்கிருதமென்பது, பிரயத்தினத்தினாலே வாயுவை நிறுத்தி வழக்கஞ்செய்வதனை லாகியது இலயயோகமென்றுஞ் சொல்லப்பட்டது.

(25) கேவலகும்பகமென்பது, பிராணவாயு மனதோ டேகூட்டி ஸ்திரமாய் நிற்கும்போது ஹடயோகமென்றுஞ் சொல்லப்படும்.

(26) இவை அதிக்கிரமித்தால், அமனஸ்கமாகிய இராஜயோகமென்று சொல்லப்படும்.

(27) பிராணவாயு ஜபாரூபமாய்த் தன்னிச்சையில் தியானபீடத்திறகுக் கொண்டுவருவது மந்திரயோக அஜபா யோகமாகும், பிராணவாயு நாதத்தில் லீனமானது இலயயோகமாகும்; மனதும் வாயுவும் ஏகமாய் ஸ்திரமானது ஹடயோகமாகும். துரிகரணமும் மௌனநிலையில் விருத்திகளில்லாமல் பிந்து நாதாந்தமத்தியில் பிராணயாமமிஞ்சி யிலயஸ்தானமடைந்திருப்பதும் இராஜயோகமாம்.

(28) பிராணயாம விதானத்தினாலே இந்த நான்குவித யோகங்களாலும் சமஸ்த நன்மைகளும் சித்திக்கும். ஆகை

யால் அப்பியாச சூரனான நீயும் பிராணயாமத்தை அனுஷ்டி
த்துவரவேண்டியது.

(29) அதில் அஜபாரூபமாவது-பிந்துடன்கூடின சிகா
ராந்தமான பீஜாக்ஷரத்தோடு உச்ஸ்வாஸரூபமாய் வெளியில்
புறப்படும். பிறகு பிந்தோடுகூடி வகாராந்தமான பீஜாக்ஷரம்
நிஸ்வாஸரூபமாய் உள்ளே பிரவேசிக்கும்.

(30) பிராண வாயுவானது சகலமானபெயர்களுக்கும்
இந்தப்படியே போக்குவரத்தாகவிருக்கும். இப்படிக்கொத்த
பிராணஸ்வரூபமான அஜபாகாயத்திரி மந்திரத்தை சர்வஜீ
வன்களும் தனக்குத்தானே, தன்னையுமறியாமலே, சதாகால
மும் ஜபித்துக்கொண்டே வருகிறார்கள்.

(31) எவனொருவன் அருணோதயகாலத்தில் குரு உப
தேசக்கிரமம்போல இந்த அஜபாகாயத்திரி மந்திரத்தைப்பிர
தினமும் தப்பாமல் அஹோராத்ரம் இருபத்தோராயி
ரத்தறுநூறு சங்கையாக ஜெபம் பண்ணினால் அஜபா மந்திர
பலத்தை யடைவான்.

(32) அந்த அஜபா மந்திரத்தைச் செபிக்கச் சங்கற்
பம்செய்து அனுஷ்டித்துவந்தவர்கள் சகலபாபங்களிலு நின்று
விடுபட்டுச் சீக்கிரமாகச் சிவயோகசித்தியையடைவார். இதற்
கெவ்வளவும் சம்சயமே யில்லை.

(33) இந்த மஹாமந்திரதத்தை யருணோதய காலத்தில்
நியமமாக விருந்துகொண்டு, இந்த விதிப்பிரமாணமாக, சங்

சற்பஞ்செய்து, உஸ்வாச நிஸ்வாசரூபமான ஸ்வாசம், இருபத்தியோராயிரத் தறுநூறும், மூலாதாரமுதல்சஹஸ்திரதளகமலபரியந்தமான, சப்தமண்டல தேவதைகளாகிய, கணேசன்முதல் பிரம, விஷ்ணு. உருத்திர, மஹேஸ்வர, சதாசிவ சற்குரு இந்த எழுதேவர்சட்கும் முறையே 600, 6000, 6000, 6000, 1000, 1000, 1000 மும் அவரவர்களுக்குச் சொன்ன சங்கைப்பிரகாரம் செப சமர்ப்பணம் பண்ணி, அஜபாமந்திரத்தை மஹேஜதிருஷ்டியால் பார்த்து வர வர, ஆத மந்திர பீஜாக்ஷரங்க ளிரண்டும் திரிவேணி சங்கமத்தில் லீனமாகவும், பிம்மரூபமான பிரணவநாதம் பிரகாசிக்கும்.

(34) இடதுபுறமான நாசிகாரந்திரத்தின்வழியாய்வரும் ஸ்வாசமானது இடகலை சந்திரன் யமுனாநதியென்றும், தக்ஷணகதியான வலது நாசிகா ரந்திரத்தின்வழியாய் வரும் சுவாஸம் பிங்கலை, சூரியன் சங்கராந்தியெனறும், நாசிகாரந்திரங்கள் மத்திமைகதியாய்வரும் சுவாசமானது சுஷும்னாநாடி அக்கினிகதியென்றும் சரஸ்வதி நதியென்றும் சொல்லப்படும். இந்த மூன்றுநதிகளும் கூடினஸ்தலம் எதுவோ அந்தஸ்தலத்திற்குப்பெயர், திரிவேணிசங்கமமென்றும், ஜெமஸ்திரிகூடமென்றும் சொல்லப்படும்.

(35) அப்படிக்கொத்த ஸ்தலமானது எதுவென்றால்—கரணரந்திரங்களிரண்டும் நேத்திர ரந்திரங்களிரண்டும் நாசி

காரந்திரங்களிரண்டும் எந்த இடத்தில் சங்கமமாககூடியிரு க்கிறதோ அந்த இடத்திற்குப்பெயர் சதுஷ்பீடமென்றும் ஸிருங்காடகமென்றும் சொல்லப்படும்.

(36) ஆகையினால் அக்குலஸ்தானத்திற்குத் திரிகூட மென்றும் திரிவேணிசங்கமமென்றும் சதுஷ்பீடமென்றும் ஸிருங்காடகமென்றும் நான்கு நாமங்கள் சொல்லப்பட்டிருக் கின்றன.

(37) உஸ்வாச நிஸ்வாசரூபமான பிராணவாயுவை,மன தோடேகூட்டித் திரிகூடத்தில் சேரச்செய்து அதன்மேல் திரிகோணவேணியாகிற சுஷும்னா நாடி மார்க்கத்தில் பிரவே சிக்கப்பண்ணவேண்டும்.

(38) அப்படிக்கொத்த பிராணவாயுவானது தான் ஜீவன். அது வெளியே நடக்கிறகதியை நிறுத்தினால் ஊர்த்துவ சுக்ஷுமசக்தி நிபோதனமாம், அந்தவாயுவைப் பிரத்தியக்ஷ மாய்த் திருப்பிக்கீழேநடப்பித்தால் மத்தியசக்தி பிரபோதன மாம். அந்தவாயுவைப் பின்னேயும் கீழேநடப்பித்தால் அபான த்தில்முட்டி மூலசக்தியாகுஞ்சனமாம்.

(39) இந்தப்பிரகாரம் ஊர்த்துவசக்தி, மத்திமசக்தி, அதோமுகசக்தி இம்மூன்றையும் கிரமமாக, நிபோதனமும், பிரபோதனமும், ஆகுஞ்சனமும் பண்ணினால் யோகீஸ்வரன் பரமகதியை அடைவான்.

(40) ஆசையினாலே மஹாவாச்சரியகரமான சந்திர, சூரி யாக்கினி, மண்டலங்களில் இந்த மூன்று சக்திலக்ஷணங்க ளைப் பிரணவநாதத்தொனியோடே வாயுவைப்பந்தனம் டண் ணிவரவேண்டும்.

(41) வேதங்களும், மும்மூர்த்திகளும், திரிலோகங்க ளும், திரிகுணங்களும், இவை முதலாகிய சகலமும் பிர்ம்ம ஸ்வரூபமான பிரணவமந்திரத்திலேயே யடங்கியிருக்கிறதென் பது நிச்சயமாம்.

(42) சகல சித்துபுருஷாளு மிப்படிக்கொத்த கேவல கும்பக விதிக்கிரமத்தையறிந்து அனுஷ்டித்துப் பிர்ம்மரூபத் தை அடைகிறார்கள், இதுவே நிச்சயம். இந்தக்கும்பகமானது சகலதந்திரங்களிலேயுஞ் சிரேஷ்டமுடையதும், மஹா ஆச் சரியகரமாகவு மிருக்கும்.

(43) எவனொருவன் தன்னுடைய தேகத்தில் நடக்கிற பிராணவாயுவினுடைய போக்குவரவுகளையும் விவரங்களை யுமறிந்து மதற்குத் தக்கனவிதானத்தினாலே ஸ்தம்பனம் டண் ணிவருகிறானோ அவனுக்கு வாயுதாரணை சித்தியாகும்.

(44) சித்து புருஷாளுடைய சமாதியோக சாஸ்திரங் களிலே கேவல கும்பகலக்ஷணம் சொல்லியிருக்கவு மதன் அருமை அதி ரஹஸ்யமாக விருக்கிறபடியால் அவிவேகிகளாக விருக்கிறபெயர்கள் அறியமாட்டார்க ளாகையால், அவர்கள் குருமூலமாகச் சித்திசெய்துகொள்வது புத்தியாகும்.

(45) குருகடாக்ஷத்தினாலே கேவல கும்பகத்தில் வாயுவை நிற்கப்பண்ணி யப்பியாசித்து வருபவன் யோகசாதனசித்தியெய்தியதனால் முக்திக்குச் காரணபந்தங்களால் வரும் சர்வவிக்கினங்களையும் போக்கடிப்பவனாகும்.

(46) கேவல கும்பகத்தினாலே பிராணவாய்வு விஷ்ணுபதத்தில் நிச்சப்தமாய் நிறைந்தேயானால் அப்போது ஜீவபரமாத்துமாவுக்குள் ஐக்கியமுண்டாம.

(47) சார்தமாசாமல்நின்றதே தத்துவமென்றும் அந்தர்வசனமென்றும், பரமபதமென்றும் சொல்லப்படும். அதுவே பூதேந்திரியாத்மகமாகப் பிரகிருதிக்குஞ் சகலதத்துவங்களுக்கும் இலயஸ்தானமென் றறியவேண்டியது.

(48) பந்தனங்களானவை—மூலபந்தனம், ஓட்டியானபந்தனம், ஜாலந்தர பந்தனமென மூன்றாகும், அப்பந்தனத்திரயங்களை யப்பியாசம் செய்துவந்த யோகீஸ்வரனுக்கு ஊர்த்துவகதியாயெழும்பும் வாய்வு சுத்தாகாசத்தில் நின்றதனாலே, பஞ்சபூதங்களும சர்வேந்திரியங்களும் தன்கருவிகளும் மனம், புத்தி சித்தம் அஹங்கார மிவைமுதலான ஸமஸ்தமும் லீனமாகும். அப்போதுதான் எல்லாவித சௌக்கியமும் வருமென்றுசொல்லப்படும்.

(49) பந்தனத்திரயங்களில் மூலபந்தனமாவது— வாயுவை நிரோதனஞ் செய்யுஞ்சமயத்தில், அபானனென்கிற சூரியகலையைப், பிராணனென்கிற சந்திரனுடனே சேர்த்து ஊர்

த்துவம் பண்ணினால் சமஸ்தயோக சித்திகளையும் அடையச் செய்வதுதான் மூலபந்தனமாம்.

(50) ஒட்டியானபந்தனமாவது — நாபியின்கீழ் அபான வாயுவையும் நாபிக்குமேல் பிராணவாயுவையும் நிறுத்தி அறிவின்பலத்தால் பந்தனம் பண்ணுகிறதுதான் ஒட்டியானபந்தனமாம். இதுசகல ரோகங்களையும் ஜனனமரண துக்கங்களையும் போக்குவிக்குமாகையால் உத்தமமான பந்தனமென்று சொல்லப்படும்.

(51) ஜாலாந்தர பந்தனமாவது கழுத்தை வளைத்துக்கொண்டு ஹிருதயத்தில் முட்டிப்பலமாய்ச்சேர்க்கிறதுதான் ஜாலாந்தரபந்தனமென்று சொல்லப்படும். அது நாதத்திலிருக்கிற அமிருதத்தை யிறங்கச்செய்யும்.

(52) இப்படிக்கொத்த பந்தனங்கள் மூன்றையும் அப்பியாசித்துவர, ஊர்த்துவ மத்திமங்களாலேயும், அபானவாயுவினுடைய ஆகுஞ்சனத்தினாலேயும், நாசிகாரந்திரத்தினாலேயும் சகலவாயுக்களும் உள்ளே பிரவேசிக்குமதனால், அதிசீக்கிரதநில் கேவலகும்பகமானது சித்தியாகும்.

(53) சர்வகாலமும் எவனொருவனுக்குக் கேவலகும்பகமப்பியாசமாகிச் சித்தியாகுமோ அவன் மஹாபிரசித்தனான யோகீஸ்வரனென்று சொல்லப்படுவான்.

(54) இந்தப்பிரகாரமாகப் பிராணயாம சாதனத்தை மூன்று மாசம் நியமம் தவராமல் செய்துவந்த யோகீஸ்வரனுக்குச், சரீரத்திலுள்ள ரோகங்கள் அறும், அக்கினிதீபனமும் உண்டாகி சமஸ்தநாடிசுத்தியும் நாதஸ்ரவணமு மூண்டாகும்.

(55) ஆகாசத்திலே பிராணவாய்வு லயமாய் அந்தக்ஷணம் உன்மனிபதத்தை யடைகிறவரைக்கும் பிரமஞானியானவன் இந்தகேவல கும்பகாப்பியாசத்தை விடாமல் அப்பியாசித்து வரவேண்டும்.

(56) அனுஷ்டானமாவது — முதலாவது பிரமஞான குருவைநமஸ்கரித்து அந்தரங்கத்திலிருக்கிற காமக்குரோதிகளாகிற சத்துருக்கள் ஆறுபெயர்களையும் ஜயித்து, ஏகாந்தமாயுள்ள சுத்தஸ்தலத்திலிருந்துக் கொண்டுபூருவ மத்தியத்தில் பரமசிவனைத் தியானம் பண்ணிவரவேண்டும்.

(57) இந்தப்படிக்குச் சர்வகாலமும் ஆக்கினையாகாசத்தில் தியானித்து ஆனந்தத்தை யடையவேண்டும். அப்போது சந்திர மண்டலத்திலிருந்து வருகிற அமிருதத்தை பானம்பண்ணிசங்கல்ப்ப விகல்பங்களுடைய கூட்டத்தைச் சாதிக்கவும்.

(58) திரிகூடஸ்தலத்திலே பிராணவாயுவைத் திடமாக நிறுத்தி வாய்வும் மனசும் ஒன்றுபடுத்தி திரிகோண ரூபமான ஸுஷும்நா நாடிமார்க்கத்திலே பிரவேசிக்கப்பண்ணவும் அதினால் ஊர்த்துவ சூக்ஷுமகுண்டலியைப் பேதித்து விஷ்ணுபதத்தை யடையப்பண்ணிச் சுகத்தை யனுபவிக்கவும்.

(59) இப்படிக்கொத்த விஷ்ணுபதமானது ஆகாசரூபமும் சர்வ வியாபகமுமாயிருக்கும். சதாகாலமும் பாவிக்கப்பட்ட இவ்விஷ்ணுரூபமான சிவகேவல கும்பகத்தை யப்பியாசித்து வருவதினாலே சித்தசுத்தியான பிராணயாமமென்கிற தீர்த்தத்தைக்கொண்டு சித்தலிங்கத்துக்கு அபிஷேகம் பண்ணிவைத்து பூஜிக்கவேண்டும்.

(60) இந்தப்படி பாஹ்ய சதுரங்க விதானமாகிற சிவ பூஜையிரண்டாம் படலம் சம்பூரணம்.

இரண்டாவது படலம் முற்றிற்று.

ஸ்ரீ பரப்பிர்ம்மணே நம:

ஸ்ரீகுருரஹஸ்யோபதேசமெனும்

# புருஷார்த்தஞானசிந்தாமணி நூல்.

## ௬-வது அஷ்டாங்க அந்தரங்க விதாநப்படலம்.

### அவதாரிகை :

ஸ்ரீ குருமூர்த்தியானவர் சிஷ்யனுக்குச் சதுரங்க
விதானத்தை உத்தமமான வாக்கியங்களி
னாலே பூர்த்திசெய்து மேலும் அஷ்
டாங்க அந்தரங்கவிதானத்தை
உபதேசிக்கத்தொடங்கினார்.

(1) குருவாக்யம் கடவாத அன்புள்ள மாணாக்கா!
இனி அஷ்டாங்க அந்தரங்கவிதாநத்தைச் சொல்லுகிறோம்,
சிவார்ப்பிதமான மனசோடேகூடினவனாய்க்கேள்.

(2) அந்தரங்கவிதானமென்பது :—சுத்தமான சாக்கிர
விசாரணையில் சுரோத்திராதி யிந்திரியங்களினாலே பிறந்த
விஷயங்களாகிற நிர்மலகந்தத்தைச் சிவலிங்கத்துக்குச் சமர்ப்
பிப்பது அந்தரங்க விதானமெனப்படும்.

(3) யோகீஸ்வரனான ஒருவன், கூர்மமானது தன்னுடைய அங்கங்களைத் தன்தேகத்தில் அடக்கிக்கொள்ளுகிறவிதமாகச் சகலவிந்திரியங்களையும் தனக்குள்ளே யடக்கிக்கொண்டுநியமந் தப்பாமல் சிவத்தியானத்தைப் பண்ணிவருவான்.

(4) அவன் பலவிதவர்ணங்களான ஆதார கமலங்களினாலே, பிரகாசித்துக்கொண்டிருக்கிற நிர்மலபுஷ்பங்களாலேயும் நானாவிதங்களான சுகுணநிற்குணமாகிற பாவருபுஷ்பங்களினாலேயும் சிவலிங்கமூர்த்தியை அஹோராத்திரியும் பூஜை பண்ணவேண்டும்.

(5) ஆதாராதி கமலங்களாவன: - ஆதாரம் - மூலமென்றும், இலிங்கஸ்தானம் - சுவாதிஷ்டானமென்றும், மணிபூரகம் - நாபிஸ்தானமென்றும், அநாகதம் - ஹிருதயஸ்தானமென்றும், விசுத்தி - கண்டஸ்தானமென்றும், ஆஞ்ஞை - புருவமத்தியஸ்தானமென்றும், ஸகஸ்ரகமலம - சிரோபிஸ்தானமென்ற உன்னதமென்றும், இவ்வேழுஸ்தானத்தை யோகீஸ்வராளுக்குச் சுகப்பிரதானமாயும் மஹாவிசித்திரமான ஸ்தலங்களென்றும் அறியவேண்டியது.

(6) மனதை அந்தர்முகம்பண்ணி - திருஷ்டிபாஹ்யத்தில் சிதராமல் நிறுத்தி தனக்குச் சமத்வமாக விருந்துகொண்டு ஹிருதயத்திலே பிரியமாயும் சுத்தமாயும் சுத்தமாயானந்த ரூபமாயும் சகளமாயும ஆத்மஸ்வரூபமாயும் இருக்சப்பட்ட சிவஸ்வரூபத்தைச் சதாகாலமும் தியானம்பண்ணிவர

தால், அப்போது தானென்கிற அறிவானது நித்தியவஸ்துவில் கலந்து தன்மயமாகிவிடும்.

(7) இப்படி தன்மயமாக்குஞ் சகல திடானசக்கரங்களில், முக்கியமான நவசக்கிரங்களை இப்போது உனக்குத் தெரியச்சொல்லுகிறேன் கேள்:

(8) மூலாதாரத்தில் நான்கு இதழ்களுடைய கமலம்போல பிரதானசக்கிரமுண்டு, அதனந்தத்திலே அக்கினிப்பிரகாசமாகச் சர்வாபீஷ்டங்களையும் கொடுப்பதாகிய ஆதிசக்தியைத் தியானம்பண்ணவேண்டும்.

(9) அதற்குமேல் சுவாதிஷ்டானத்தில், ஆறுஇதழ்களுடனே கூடின கமலமானது ஒட்டியாணஸ்தானம் என்பதனால் அதில் மேற்குமுகமாகவிருக்கிற சிவனைத் தியானம்பண்ணவேண்டும்.

(10) அதற்குமேல் நாபிஸ்தானத்திலே பத்துஇதழ்களுடனேகூடின கமலம் மணிபூரகசக்கிரமாகும். அதன்மத்தியத்தில் மின்னல்கொடிபோல சர்வாகாரமாக முக்திப்பிரதமுள்ள மத்தியகுண்டலினிசக்தியைத் தியானம் செய்யவேண்டும்.

(11) அதன்மேல் ஹிருதயஸ்தானத்தில், ஆனந்த சக்கிரமுண்டு. அது பன்னிரண்டு இதழ்களுடனே கூடின கமலமாகும். அதிலே கன்னிகா ஜோதிலிங்காகாரமாய் இஷ்டகாம்யசக்தியைத் தியானம் பண்ணவேண்டும்.

(12) அதற்குமேல் கண்டஸ்தானத்திலேஇடைபின்கலைகளினுடைய மத்தியத்தில் சுழிமுனையின் அந்தரசதியான சக்தியை நமஸ்கரித்து தியானம் செய்யவேண்டும்

(13) அதற்குமேல் குண்டலிகம் மூல சக்கிர முண்டு இராஜகந்தமென்றும், துவாதசஸமத்பாரமென்றும் சூன்யதத்துவமென்றும் சொல்லப்படும். அதிலே சித்தியின் பொருட்டுத் தியானம் செய்யவேண்டும்.

(14) அதற்குமேல் பூமி சக்கிரமுண்டு, அது சௌந்தமென்றும் கந்தமென்றும், வாக்குக்குச் சித்திகாரமென்றும் சொல்லப்படும். அதற்கு நடுவில் ஞானவாஞ்சனமான தீப சிகாரத்தைத் தியானம்பண்ணவும்.

(15) அதற்குமேல் பிர்ம்மரந்திரத்திலே நிர்வாண ஞானமாய், சூக்ஷமமான அஷ்ட சக்கிரமுண்டு. அதிலேஜாலாந்திரமானதுடன் மோக்ஷப்பிரதானமான தாபசிகாநிபமாக தியானம் செய்யவேண்டும்.

(16) அதற்குமேல் ஆகாசசக்கிரம் பிரகாசமாகும். அது திரிகூடமென்றும், பூரணசந்திரபீடமென்றும் சொல்லப்படும் பதினாறு இதழ்களுடைய கமலத்தில் சுப்பிரமான சூன்னிய ஊர்த்துவ சக்தியைத் தியானம்பண்ணவேண்டும். இந்தப்படி நவசக்கிரங்கள் சொல்லப்பட்டது.

(17) மோக்ஷார்த்தத்தை யடையவேண்டிய யோகீஸ்வரனானவன் மேற்சொன்ன, நவசக்கிரங்களை யறிந்து தியானம செய்வதோடு இவைத்தவிர பதினாறு ஆதாரங்களுண்டுஅவைகளையும் அவசியம் சாதனைக்குக் கொண்டுவரவேண்டியது.

(18) அவற்றுள்— மூலாதாரமாவது பாதாங்குஷ்டஸ்தானமதில் பிரகாசத்தைத் தியானம் பண்ணினால் பார்வை திரப்படும்.

(19) பாத மூலஸ்தானம்—பின் குதிக்கால்களைக் கையினால் பிடித்து ஸ்திரப்படுத்தினால் அந்தக்ஷணமே அக்கினி தீபமுண்டாகும்.

(20) அதற்குமேல் குதஸ்தானம்:— சர்வகாலமும் சங்கோஷத்திலே ஆகுஞ்சனம் பண்ணினால் அபானவாய்வு ஸ்திரப்படும்.

(21) இலிங்கஸ்தானம்—அதில் தண்டை.சகோஷ்ணம் பண்ணினால் மனோவாய்வு மூன்று முடிச்சுகளைப் பேதித்து அப்பால் வஜ்ர நாடியான சுழிமுனையில் பிரவேசிக்கும், பிந்து ஸ்தம்பனமாம்,

(22) ஐந்தாவது ஆதாரம் ஒட்டியானஸ்தானம், அடிக்கடி முத்திரையிலே நிறுத்தினால், மல மூத்திரக்கிருமிகள் நாசமாகும்.

(23) ஆறாவது நாபிஸ்தானம்—அதில் எவனொருவன் புத்திமானாய் யேகாக்கிர சித்தத்தோடே கூடின சமாதியிலே பிரணவத்தைச் சபித்தானானால் அவனுக்கு நாதப் பிரணவத்தொனி கேட்கும்.

(24) ஏழாவது ஹிருதயஸ்தானம்— அதிலே பிராண வாய்வு நாலுடனே மததியகமலம் விகசிக்கும்.

(25) எட்டாவது கண்டஸ்தானம்:— அதில் காண்ட மூல தப்த நாடியிலே யழுக்கினால், இடை பிங்கலைகளிலேசஞ் சரிக்கிற வாய்வு ஸ்திரப்படும்.

(26) ஒன்பதாவது வெண்டிகாரஸ்தானம்— அதில் நாக்குநுனியை நிறுத்தினால் காரணியான அமிர்தம் இறங் கும்.

(27) பத்தாவது மூலஸ்தானம் -- கர்ப்பகோணத்தினு லே நீண்டநாக்கு நுனியை விபரீதமாய் பிரவேசிக்கப் பண் ணினவன் உன்மனீபாவத்தை யடைவான்.

(28) 11-வதுஇரசானஸ்தானம் — அதில் நாக்குநுனியை யுறையப்பண்ணினால் அவனுக்கு அமிர்தபானமும், மகத்வ மும்உண்டாகும்.

(29) 12-வது கந்தஸ்தானம்— அதின் மேல் நாக்குநு னியை யுறையப்பண்ணினால் 6-மாசத்தில் அந்தர் ஜோதியை க்காணுவான்.

(30) 13-வது ஆக்கிராண மூலஸ்தானம்:— அதில் எவனொருவன் நித்தியமும் மனசோடேகூடிய திருஷ்டியை ஸ்திரப்படுத்தினால் அவனுக்கு வாய்வு ஸ்திரமாம்.

(31) 14 - வது. லலாடஸ்தானம்—அதிலே யோகீஸ் வரனானவன் மனசோடேகூடி வாயுவைநிறுத்தினால் சர்வசித் தியையும் அடைவான்.

(32) 15 - வது. பூருவஸ்தானம்—அதில் நிர்சலதிருஷ்டியால் பார்த்தால் சீக்கிரமாய் ஜோதிகாணப்படும்.

(33) 16 - வது. நேத்திரஸ்தானம்— அதில் கடைக்கண்பார்வை மனோஹாரமாய் சதானைத்நரூர்தால் மாசஜோதி சீக்கிரம் காணப்படும். இவை சோடச ஆதாரமாம்.

(34) யோகஅஷ்டாவதானி - பந்தனத்திரயங்கள் மூன்றும் ஆசனம் ஒன்றும், பர்தலமந்திரம் ஒன்றும், நாதசிரவணம் ஒன்றும், கேவல கும்பகமொன்றும், தியானமொன்றுமான இவை எட்டுவிதங்களையும் அனுபவித்த யோகீஸ்வரன் அஷ்டாவதானியெனச் சொல்லப்படுவான்.

(35) தியானலக்ஷணம்—தேகமென்கிற பாத்திரத்தில் விளங்கிக்கொண்டிருக்கிற தியானமென்கிற அக்கினியிலே பூதங்களாகிற தசாங்கத்தையும் தூபமாகப்போட்டு மனோதாரணையினாலே ஆத்துமலிங்கத்தைப் பூஜைபண்ணுவது தியானலக்ஷணமென்னப்படும்.

(36) தாரணையாவது— முக்கியமான தியானகோசரத்தினாலே மனசு திடப்படுவது தாரணையென்று சிவயோகிகள் சொல்லுவார்கள். அதினுடையக்கிரமம் முன்சொல்லாமலிருந்தபடியினாலே அந்த அந்தர்மகாதாரணையிலக்ஷணங்களைத் தனித்தனியே எடுத்துச் சொல்லுகிறோம்; சாவதானமாய்க் கேள்.

(37) அந்த தாரணை யைந்தவகைப்படும் அதாவது, தாரணியென்றும், வாருணியென்றும், ஆஞ்ஞாக்கினியென்றும், வைரவியென்றும், நமோன்மையென்றும் சொல்லப்படும்.

(38) யோகீஸ்வரர்களாலே பிரகிருதி தாரணபஞ்சக மென்று சொல்லப்படுகிற மேற்கண்ட தாரணை யைந்தையும் அப்பியாசித்துவருகிறவர்களுக்குச் சர்வசித்திகளுமுண்டாகும்.

(39) பிருதிவு சித்தியாவது — தாரணியென்கிற தாரணைக்குப் பாதாதிமுதல் முழங்கால்வரையில் பூமிசக்கரஸ்தானமாகும். அதில் நகாராதி பீஜாக்ஷரத்தோடுகூட வாயுவையும் மனசையும் சம்மேளனஞ்செய்து நிறுத்தி பிருமாவினிலக்ஷணத்தைக்கொண்டு தியானித்துவர பிருதிவுசித்தியாகும்.

(40) அப்புசித்தியாவது—வாருணியென்கிறதாரணைக்கு முழங்கால்முதல் நாபிவரையில் அப்பு சக்கரஸ்தானமாகும் அதில் மகாராதி பீஜாக்ஷரத்தோடுகூட வாயுவையும் மனசையும் சமமேளனஞ்செய்து நிறுத்தி பீதாம்பரதாரியாயும் பிரசன்னமுகமும் சங்குசக்கிரங்களும் தரித்து ஸ்படிகவாணமாய் மன்மத பிதுருவான ஸ்ரீமஹாவிஷ்ணுவை நமஸ்கரித்து தாரணை பண்ணினல் அப்புசித்தியாகும் அதனல் சகல ஜயமும் உண்டாகும்.

(41) அக்கினி சித்தியாவது—ஆஞ்ஞாக்கினி யென்கிற தாரணைக்கு நாபிமுதல் கண்டம் வரையில் அக்கினி சக்கரஸ்தானம். அதில் சிகார பீஜாக்ஷரத்தோடு கூடவாயுவை மனசுடனே நிறுத்தி, திரிநேத்திரங்களும் பிரசன்ன வதனமும், வரதாபயஹஸ்தங்களும் பஸ்மதூளிதமான சரீரமும் சாந்தரூபமும் பால சூரியப் பிரகாசமாகிய உருத்திர மூர்த்தியை நமஸ்கரித்து தாரணை பண்ணினல் அக்கினிஜெயமுண்டாகும்.

(42) வாய்வு சித்தி —வைரவி யென்கிற தாரணைக்குக் கண்டமுதல் புருவ மத்திய பரியந்தம், வாயு சக்ரஸ்தானமாம், அதில் வகார பீஜாக்ஷரத்தோடே கூட வாயுவை மனசோடே நிறுத்திப்பிரகாச ரூபமான திவ்வியதேஜஸாகிய மஹேஸ்வரனைத் தியானம் பண்ணினால் வாய்வு தேகத்தையடைந்து வாயுவைப்போல சஞ்சரிக்கும் சித்தியைப்பெறலாம்.

(43) முக்திசித்தி—நமோன்மை யென்கிற தாரணைக்குப் புருவமத்திய முதற்கொண்டு ஸஹஸ்திர கமலபரியந்தம் ஆகாசச்சக்கிர ஸ்தானமாம். அதில் யகாரத்தோடு ஹரீங்கார பிஜாக்ஷரங்களுடன் வாயுவை மனசுடனே நிறுத்தி ஐந்து முகமும் பத்துகைகளும் மூன்று கண்களும் சந்திரகிரீடமும் சகல ஆயுதங்களும்தரித்துச்சகலதத்துவங்களுக்கும்ஆதிதத்துவமாகியபிந்துஹகார ரூபமானசதாசிவனை நமஸ்கரித்து தாரணை பண்ணிவரமுக்தி சித்தியாகும்.

(44) காயசித்தியாவது— இவ்விதமாக வைந்து தாரணைகளும், ஒவ்வொன்றுக்கு மைந்து நாழிகை வீதம்நிறுத்திக்கொண்டால் காயசித்தியாகும்.

(45) இந்தப்பூமியில் ஐந்து தாரணையினால் பிராண ரூபமாகிறவாயுவை நிறுத்தி, தியானத்தினாலாகிலும், கர்மத்தினாலாகிலும் சாதனைச்செய்து வருவானாகில் அவன் சம்சாரமாகிற அஞ்ஞான சமுத்திரத்தை, எளிதாக, ஞானக்கினியினாலே சாகரநீரைச் சோஷிக்கச்செய்து தாண்டுவான்.

(46) மேலும், சுஞ்ஞானமாகிற தீபத்தை, நிர்மலபுக்தியென்கிற ஹஸ்தத்தினாலே பிரகாசப்படுத்தி, ஹிருதயமாகிற

கிரஹத்திலே அந்தப் பிரகாசத்தைப் பிரவேசிக்கச் செய்யவேண்டும்.

(47) அப்படிபிரவேசித்த ஜோதியானது, அஞ்ஞானமாகிற அந்தகாரத்தைப்போக்கி யவ்விடத்தில் விளங்கிக் கொண்டிருக்கிற ஆத்துமலிங்க மூர்த்தியை மனோதிருஷ்டியினாலேபார்த்து ஸ்திரமான சமாதியினாலே சேவித்து, ஜீவாத்மாவைபரமாத்மாவாகியஅந்த லிங்கமூர்த்திக்கு நைவேத்தியமாக்கி அப்பியாசித்து வரவேண்டியது.

(48) சமாதியாவது இலவணமும் ஜலமும் ஏகரூபமாகவிருப்பதுபோல மனசானது ஆத்மாவோடே கூடினால் அதுவே சமாதியென்று யோகீஸ்வரராலே சொல்லப்படும்.

(49) சுத்தசமாதி:— ஜீவாத்மஸ்வரூபமாயும் மாயாசம்பந்தமாயுமிருக்கிற நாம், அந்தமாயை விலக்கி, பரமாத்மாவுக்குள்ளே ஐக்கியப்பட்டால் அப்போது சமஸ்த வஸ்துக்களுக்கு மிஞ்சின சுத்த சமாதியாகும்.

(50) இந்தச் சுத்தசமாதியினாலே, பிரமத்தில் ஐக்கியமானமனசுடைய யோகீஸ்வரர்களுக்குச், சுரோத்ரோந்திரியங்களும்விஷயாதிகளும், அஹங்காரமும், மனோவிர்த்திகளும், மானாபிமானங்களும் சீதோஷ்ணங்களும், புண்ணியபாவங்களும் சங்கற்ப விகற்பங்களும் கொஞ்சமும் அவர்களுக்கு இல்லை யென்று அறியவேண்டியது, இதுமகா ஆச்சரியமாம்.

(51) சுத்தசமாதியில் கலந்தோர் பெருமை -- சமாதியில் லீனமான மனசையுடைய யோகீஸ்வரர்கள், உத்தமமான ஆகாரம்புசித்தாலும், புசிக்காமல் நிராகரித்தாலும், மிதமான நித்திரை, கொண்டாலு மில்லாமலிருந்தாலும் குகை, வனம், பர்வதம், பூமிமுதலிய எந்த இடங்களிலும் சஞ்சரித்தாலும் சஞ்சரிக்காமல் சமாதிகூடியிருந்தாலும் இருப்பார்கள்; தங்களுக் கோ ரபேக்ஷையில்லாமல் உலகோபகாரமாக சகல கருமக்கிரிகைகளையும் சிரத்தையோடு பெண்ணினாலும்பண்ணுவார்கள், செய்யாமல்விட்டாலும் விடுவார்கள் இந்தப்படிநானாவிதமான கொள்கைகளையும் செய்து கொண்டிருந்தும் சமத்வமுள்ள மனசு சலியாமலிருப்பார்கள்.

(52) இப்படிக்கொத்த அஷ்டாங்க யோகத்தோடேகூடின ஹடயோகத்தை யாலசியமில்லாமல் அப்பியாசம்பண்ணின நிஷ்டாபரனை யோகீஸ்வரனுக்குச் சகல சித்திகளு முண்டாகும் அவ் வகைசித்திகளின் விவரத்தைச் சொல்லுகிறேன் கேள் ?

(53) அப்பியாசக் கிரமமாகத் தேர்ந்த யோகிக்கு, முதல் வருஷத்தில் தேகத்திலுள்ள சகலரோகங்களையும்போக்கி, சர்வ ஜனப்பிரியனாக்கி வைக்கும்.

(54) அப்பியாசம் இரண்டாவது வருஷத்தில் -தெய்வ வாக்காகச் சகல வித்தையும் தானேவரும்.

(55) அப்பியாச மூன்றாவது வருஷத்தில்— சர்பாதி விஷங்களால் துன்பமில்லை பயமுமில்லை.

(56) அப்பியாச நாலாவது வருஷத்தில்— பசிதாகநித்திரை சீதோஷணங்களுந் துன்பஞ்செய்யாது அவைகளால் வருத்தமுமில்லை.

(57) அப்பியாசம் ஐந்தாவது வருஷத்தில்—நீண்ட தூரத்தில் பிரஸ்தாபித்துக் கொள்ளும் வர்த்தமானங்களையும் தங்கள் தங்கள் மனதில் நினைத்த கருத்தையும் அறியக்கூடும் வாக்குச் சுத்தியும் பரகாயப் பிரவேசமுமுண்டாகும்.

(58) அப்பியாசம் ஆறாவது வருஷத்தில்— வஜ்ராயுத முதலிய ஆயுதங்களாலேயும் உபாதிகளில்லை,மிகுந்தவேகமும், தூர தெரிசனமும் உண்டாகும்.

(59) அப்பியாசம் ஏழாவது வருஷத்தில்--பூமி சஞ்சாரமும் தெய்வலோக சஞ்சாரமும் உண்டாகும்.

(60) அப்பியாசம் எட்டாவது வருஷத்தில்—அஷ்டைஸ்வரியங்களுண்டாகும்.

(61) அப்பியாசம் ஒன்பதாவது வருஷத்தில்-தேகம் வச்சிரகாயமாகும் ஆகாசகமனமும் சகல திக்குகளிலேயும் சஞ்சாரமு முண்டாகும்.

(62) அப்பியாசம் பத்தாவது வருஷத்தில்— மனோவேகமாக நினைத்தவிடங்களெல்லாம் அந்த க்ஷணமே போகலாம்.

(63) அப்பியாசம் பதினோராவது வருஷத்தில்—சகலஈஸ்வரர்களாலேயும் படைக்கப்பட்ட சரா சரங்களெல்லாம் ஆச்

சரிய மடையத்தக்கதாகத் தனவசப்படுத்திச் சகல ஞானதத்து மும் சகல சித்திகளும் பெறலாம்.

(64) அப்பியாசம் பனிரெண்டாவது வருஷத்தில்—சா க்ஷாத்காரமாகிய பரமேஸ்வரனுக்குச் சமானமாய்ச் சகல பிர பஞ்சங்களையு முண்டாக்கி ரக்ஷித்து சம்மரிக்கவும் கூடும்.

(65) இந்தப்பிரகாரம் சற்குரு பாதபக்தியினாலே—பனி ரண்டு வருஷமும் விக்கினங்களில்லாமலே அப்பியாசம் செய் துவந்த யோகீஸ்வரர்கள் திடவாத்மாவாய்ச் சகலசித்திகளையும டைந்து ஜீவன் முக்தனாய்த் தனக்குச் சம்மதித்தபடி சஞ்சரித் துக் கொண்டிருப்பார்கள்.

(66) ஆகையினாலே மகாவாச்சரியகரமான சிவபூஜாங்க மாகிய இந்த அஷ்டாங்கயோகத்தை அப்பியாசித்து வருகிற ஆதரவினாலே நீயும் ஜனன மரணங்களில்லாமல் சரீர மிருக்கு மட்டும் யோகத்தில் விஷயாதீதனாக விருந்து விதேக முக்தியை யடைவாய்.

(67) இயமம், நியமம் இவ்விரண்டையும் நீ ஆசரிக் கிற படியினாலேதான், சிவபக்தனென்று உன்னைச் சொல்லப் படும்.

(68) சதா சின்மயப்பியாசியானவன் மகேஸ்வரபதத்தை யடைவான்.

(69) சர்வதா லிங்கஸ்வரூபமான ஆகாசத்தில் பிராண வாயுவை மனசோடே கேவலகும்பகத்தினாலே வசீகரம் பண் ணினவன், பிராணலிங்கமென்று சொல்லப்படுவான்.

(70) பிரத்திஹாரத்துடனே கூடினவன் பிரஜாபதி யென்று சொல்லப்படுவான்.

(71) தியானதாரணையை யடைந்தபுருஷன் சரணஸ்தலத்தை யடைந்த புத்திமானென்று சொல்லப்படுவான்.

(72) நிச்சல சமாதியினால் இலிங்கசம ஐக்கியமடைந்த புருஷன் அத்வைத பாவகமான அதீத பிர்ம்மானந்த நிச்சயமுண்டானவனாகும். இந்தப்பிரகாரம் அஷ்டாங்கயோக நிஷ்டரான யோகீஸ்வரன் வீரசைவனென்றுஞ் சொல்லப்படுவான்.

(73) ஆனபடியினாலே தோஷரகிதனான நீயும் கருமங்களினாலேயாகிலும், ஞானத்தினாலேயாகிலும் சர்வயத்னங்களாலேயாகிலும் இந்த அஷ்டாங்கயோகமார்க்கமாகச் சிவயோகத்தை ஒவ்வொருவரும் அப்பியாசம் பண்ணிவரவேண்டும்.

(74) இந்தப்படி அஷ்டாங்க அந்தரங்க விதாக மூன்றும் படலம் சம்பூரணம்.

மூன்றாவது படலம்

முற்றிற்று.

ஸ்ரீ பரப்பிரம்மணேநமா:.

ஸ்ரீ குருரஹஸ்யோபதேசமெனும்,

# புருஷோர்த்த ஞானசிந்தாமணி நூல்.

## 4 — வது அத்வைதப்படலம்.

அவதாரிகை:

ஸ்ரீ குருமூர்த்தியானவர் சிஷ்யனுக்கு அஷ்டாங்க அந்தரங்க விதாநத்தைப் பூர்த்திசெய்து மேலும் அத்வைதத்தை உபதேசிக்கத் தொடங்கினார்.

(1) சிஷ்யகோடிகளில் உத்தமமான மாணாக்கா? பயபக்தி விஸ்வாசத்துடன் முழுமனசோடே, நான் சொல்லப்போகிற அத்வைதத்தைக், கேட்பாயாக.

(2) அத்வைதமாவது — இரண்டறகலத்தல் எனப்படும். துவைதம், ஜீவாத்துமா பரமாத்துமா வைபவங்களைக் குறித்தது. அத்வைதயோகமாவது மனவாக்கு காயங்களையும் இந்திரியங்களையும் ஒருவழிப்படுத்தி ஓங்கார ரூபமான ஆத்துமாவை தன்னில் கண்டுலயப்படுவதெனப்படும். ஆத்துமாவையும் பரமாத்துமாவையும் பிரித்துப் பேசமுடியா! ஒன்றிலொன்று அட

ங்கினாலும், ஒன்று மீசுரப்பட்டு வொன்றுள் ஒளித்தாலும், சமத்துவமாய்க் கலந்து ஒன்றேயானாலும், செய்காரியங்களைப் பிரித்து, பார்த்து நிச்சயிக்கக் கூடாவிட்டாலும் அந்த நிலைக்கு அத்வைத மென்றே முடிந்த பொருளாகச் சொல்லப்படும்.

(3) குருபிரார்த்தனை— மேற்சொன்ன அத்வைதமாகக் காணும் ஒவ்வொரு பதார்த்தத்தினுள்ளும் பொருளு மதன்சத்தியும் கலந்திருப்பதுபோல எந்த வஸ்துவிலும் கலந்திருப்பது குருவும் தெய்வமு மெனசொல்வரெல்லோர். ஏனென்றால் எந்தப்பொருளும் குரு காட்டத்தான் தெரியவரும். அந்தப் பொருளில் பூரணமாயடங்கியிருப்பது சர்வஞ்ஞன சிவமாகும். ஆகையால் அஞ்ஞானத்தை நீக்கிச் சுஞ்ஞானத்தைப் புகட்டி ஒவ்வொன்றிலு மடங்கியிருக்கிற தன்னைத்தானே அறிவிக்குங் குருவே தெய்வங்களிலு முக்கியமென்பதால் ஒவ்வொருவரும் தம்தம் வழிபடு சற்குருவையேநம்பி இருக்கவேண்டியதுடன் அவரையே சதாதிரிகூடத்தில் பூஜிக்கவேண்டியது.

(4) சர்வ வியாபகமாயும், வேத சிரசிலிருப்பதாயும் அத்வைதமாய்ச் சர்வத்திலும் கலந்து சர்வத்துக்குமாதியாயும், பிராணத்தைதிரணமாகமதித்திருக்குஞானயோகீஸ்வரர்கள் இலக்ஷியத்திலே பிரகாசித்துக்கொண்டிருக்கிற யாதொருவஸ்து வுண்டோ அந்தச் சதாசிவயோகீஸ்வர ரென்கிற ஆஞ்ஞா சக்கரத்தில் வீற்றிருக்கும் இலிங்கஸ்வரூபியானகுரு. பரமகுரு, பரமேஷ்டிகுரு, பராபர குருவென்ற நால்வரையும்அந்தக்கரணத்தால் தினமும் பூஜித்து வரவேண்டியது.

(5) சகல யோகங்களிலும் சையோகமே உயர்ந்தது, ஏனென்றால் அச்சையோகம் ஆண்பெண் கூடி ஆனந்திப்பது, ஒவ்வொரு பிராணிகளுக்குந் தெரியும் அது சிற்றின்பமென்று சொல்லப்படும். பேரின்பமாவதுசிவயோகமாகும். ஆன்மாவைப் பரமான்மாவினிடத்தில் சதாகலந் திருக்கச்செய்து, அதனால் விளையு மின்பத்தைச் சலிப்பில்லாமல் எப்போது மனுபவித்துக்கொண்டு பூமியிலும சொர்க்கததிலு மிருப்பதனால் சிவயோகமாகிய இராஜயோகம் சிரேஷ்டமென்று இருஷிகள் யோகீஸ்வரர்கள் சாதுக்களாகியஞானிகள் பக்தகோடிகள் முதலிய பெரியோர்களும் வேதாந்த சாஸ்திர மார்க்கமாகச் சொல்லுகிறதை, இப்போது உனக்கு அந்த இராஜயோக சாதனமான அஷ்டாங்கத்தைச் சொல்லுகிறேன் கேள்?

(6) முன்னாலே சொலலப்பட்டிருக்கிற அஷ்டாங்கக் கிரமங்களில் பயமுண்டு. இப்போதுனக்குச்சொல்லும் இராஜயோகமார்க்கத்துக்குப் பயமுமில்லே ஆபத்துமில்லே. இயமாதி அஷ்டாங்கங்களைச் சொல்லுகிறேன் சாவதானமாய்க்கேள்?

(7) இயமமாவது - ஆகாரம் - நித்திரை - இந்திரியங்கள், சரீரசுக சர்வவியாபாரமும் சீதோஷ்ணங்களேயும், மெள்ளமெள்ளத் தள்ளிவிட அப்பியாசம் பண்ணுவதாம்.

(8) நியமமாவது - குருபக்தி, பரமதத்துவத்தில் அபேக்ஷை, சங்கையில்லாமலிருப்பதும், இச்சித்த பதார்த்தத்திலே சிரத்தையும் ஏகாந்த ஸ்தலத்தில் வாசம்பண்ணுதலும் மனோநிவர்த்தியும் வைராக்கியபாவத்தை யடைந்திருப்பதும் நியமமாம்.

(9) ஆசனமாவது - சுகாசனத்திலிருந்துகொண்டு தன் சொரூப தியானத்தில் சதாகாலமும் அப்பியாசம்பண்ணுகிற தும், சர்வவஸ்துக்களிலேயும் பூரணபாவமடைகிறது மாசன மென்று சொல்லப்படும்.

(10) பிராணாயாமமாவது - இரேசக பூரககும்பகங்களா கிற பிரயத்தினங்களினாலே பிராணனைத் திடப்படுத்துகிறதும் சர்வஜகத்தும் அனித்தியமென்று சூன்னியபாவத்தை யடைகி றதும் பிராணாயாமமாம்.

(11) பிரத்தியாரமாவது - அந்தர்முகியாயிருந்த சித்த நிர்மலத்தினாலே வெகுவித சைதன்னியஜாலத்தோடேகூடின பிரபஞ்சமாயாவிநோதங்கள் யாவற்றையும் மறந்து மனசினா லே யுற்பத்தியாகிற வெகுவிதங்களான விகாரங்களைத் திக்கா ரம்செய்வது பிரத்தியாரமென்னப்படும்.

(12) தியானமாவது - ஸோஹம் பாவனையினாலே புத் திய மத்வைதபாவக மடைகிறதும், உலகத்தில் விளங்கிக் கொண்டிருக்கிற எந்த பர சிவஸ்வரூபமுண்டோ, அதையெப் போதும் பார்க்கிற நினைவோடே யிருப்பதும், குருகடாக்ஷத்தி னாலே சர்வபூதங்களிலேயும் சமத்துவமாய்ப் பார்க்கிறதும், ஸ்வயாத்தும பாவத்தினாலே ஆனந்தமடைகிறதும் தியானமெ ன்றும், தியானநிஷ்டையென்றும் சொல்லப்படும்.

(13) தாரணையாவது-உள்ளும்புறம்பு மேகமாய் விளங் குகிற பரமதத்வஸ்வரூபம் எதுவுண்டோ அதை நிர்மலபுத்தி யினாலே சலனமில்லாமல் நிறுத்திக்கொள்ளுகிறது தாரணை யென்று சொல்லப்படும்.

(14) நிர்விகற்ப சமாதியாவது - நிசானுபவம், சிவதத்துவம், சமத்துவமான பாவமும், தாரணை சலனப்படாமலிருப்பதும், க்ஷேத்திரபாவத்தினாலே சூன்னியமாயிராமல் சதாகாலமும் ஐக்கியபாவனையோடு இரகசியமாக நிலைத்துநிற்பது, நிர்விகற்ப சமாதியென்று சொல்லப்படும்.

(15) ஆச்சரியகரமான இந்த இராஜயோகாஷ்டாங்கத்தால் சற்குருமுன்னிலையில், ஒருக்ஷணமாத்திரத்திலே பிரமானுபவத்தை அடையலாம். இதர கருமங்களாலெவ்வளவும் அடையப்படாது. விரதாதிகள் - தானாதிகளிவைகளால் இப்பேர்ப்பட்ட பலனடைய முடியாதென்று மதிப்பாய்.

(16) உள்ளும்புறம்புமாக சகல ஜந்துக்களிலேயும் பிர்ம்மஸ்வரூபம் விளங்கிக்கொண்டிருக்கின்றது. பிர்ம்மஸ்வரூபமான சற்குருவை பஜனைபண்ணாதவர்கள் பிர்ம்மபதத்தையடையமாட்டார்கள்.

(17) ஷண்மதஸ்தர்களும், வேதசாஸ்திரபுராணிதிஹாஸமுதலானவைப் பிரசங்கிக்கிற வித்தியாப்பியாசிகளும், நானாவித ஆசிரமத்தினியமத்தினாலே கர்வித்த பெயர்களும் குருமுகமன்றியில் அபரோக்ஷமான விந்தயோக ஞானத்தையடையமாட்டார்கள்.

(18) க்ஷேத்திரம், தனம், இரம்யமானகிரஹம், ஸ்ரீ, புத்ரர்கள், பந்துக்கள், அபிமானிகள், துர்வாதகாம்யங்கள்,மந்திரலயாக்ஷரயோகங்கள் முதலிய பிரதிபந்தங்களாலே கட்டுப்பட்டுக் கருமத்தில் முந்தினபெயர்களுக்குக் குருப்பிரசாதம் கிடைக்கமாட்டாது.

(19) ஆகையினாலே ஒவ்வொருவரும், முன்னே, வரு ணாச்சாரமு முயமொழுக்காசாரமு மறிந்து நடக்கிற பிரம்ம ஞான முண்டான சற்குருவைத்தேடியடையவேண்டும்.

(20) சற்குருவானவர் - அத்துவைதானந்தமும், நித்திய நிரஞ்சனமும், நிச்சலமும், சச்சிதானந்த ஸ்வரூபமான ஆத் துமதத்துவத்தைச் சுபாவமா யறிந்திருப்பவரைச் சற்குருவெ ன்றறியவேண்டியது.

(21) தத்துவ சூக்ஷுங்களைச்சொல்லுகிறேன்கேள்: தத்து வங்க ளின்னதென்றறியாதவன், தத்துவாதீத சற்குருவை யறியான்.

(22) ஆகாசபஞ்சீகரணமாவது:—

ஆகாயத்தி லாகாயம்-ஞாதருஞானம் - மோகமுமாகும்
ஆகாயத்தில் வாய்வு - அந்தக்கரண சமானன், லச்சையு மாகும்.
ஆகாயத்தில் தேயு - சுரோத்திரேந்திரியம், பயமுமாகும்.
ஆகாயத்தில் அப்பு-ஜிக்வை-சத்தம், துவேஷமுமாகும்.
ஆகாயத்தில் பிருதிவு - வாக்கு, இராகமுமாகும்.
இவை ஆகாயத்தின் கூறாகும்.

(23) வாய்வு பஞ்சீகரணமாவது:—
வாய்வில் ஆகாசம் - மனம், தாண்டலுமாகும்.
வாய்வில் வாய்வு - வியானவாயு, ஓடலுமாகும்.
வாய்வில் தேய்வு - தொக்கு, உட்காருதலுமாகும்.

வாய்வில் அப்பு - பரிசம், நடத்தலுமாகும்.
வாய்வில் பிருதிவு பாதம் படுத்தலுமாகும்.
இவைவாய்வின் கூறுகும்.

(24) தேய்வு பஞ்சீகரணமாவது:—
தேய்வில் ஆகாசம் - புத்தி, சங்கமுமாகும்.
தேய்வில் வாய்வு - உதானவாய்வு, சோம்பலுமாகும்.
தேய்வில் தேய்வு - சக்ஷு, நித்திரையமாகும்.
தேய்வில் அப்பு - ரூபம், தாகமுமாகும்.
தேய்வில் பிருதிவு - பாணி பசியுமாகும்.
இவை தேயுவின் கூறுகும்.

(25) அப்பு பஞ்சீகரணமாவது:—
அப்பிலாகாசம் - சித்தம், சுக்கிலமுமாகும்.
அப்பில்வாய்வு - அபானன், உதிரமுமாகும்.
அப்பில்தேய்வு - சிங்குவை, வேர்வையுமாகும்.
அப்பிலப்பு - ரசம், மூத்திரமுமாகும்.
அப்பில்பிருதிவு - பாயுரு, உமிநீருமாகும்
இவை அப்புவின் கூறுகும்.

(26) பிருதிவு பஞ்சீகரணமாவது:—
பிருதிவியிலாகாசம்-அகங்காரம், மயிருமாகும்.
பிருதிவியில்வாய்வு-பிராணவாயு, நரம்புமாகும்.
பிருதிவியில் தேய்வு-ஆக்கிராணம், தோலுமாகும்.
பிருதிவியில் அப்பு-கந்தம், மாமிசமுமாகும்.

பிருதிவியில் பிருதிவு - உபஸ்தம், அஸ்தியுமாகும்.

இவை பிருதிவு கூறுகும்.

(27) இந்தப் பஞ்சபூத பஞ்சீகரணங்களினலல்பிறந்தஇருபத்தைந்து தத்துவங்களையும் யாதொருவன் அறிகிறுனே அவன் தத்வஞானியெனப்படுவான்.

(28) இந்தப் பஞ்சபூதங்கள் சம்பந்தங்களானதத்துவங்களிலே, ஆதியாத்மிகமென்றும், ஆதிபௌதிகமென்றும், ஆதிதெய்வீகமென்றும் சொல்லப்படுகிற இம்மூன்றும், கிரமமாகவிந்திரியங்களிலு மிந்திரியாதி தேவதைகளிலும் அந்தக்கரணங்களிலு மும்மூன்றுவிதமாகவிருக்கும்.

இந்தப்படி தசேந்திரியங்களுக்கும் பார்த்துக்கொள்ளத்தக்கன.

(29) அவையாவன:—

ஆதிஆத்மீகம் ஆதிபௌதிகம், ஆதிதெய்வீகமாகப்பிரியும்.

சுரோத்திரம் - சப்தம், திக்குகள்.
தொக்கு (சரீரம்) - ஸ்பரிசம், வாயு.
சட்சு - ரூபம், சூரியன்.
சிங்குவை - ரசம், வருணன்.
ஆக்கிராணம் - கெந்தம் அஸ்வனிதேவதைகள்.
வாக்கு - வசனம், அக்கினி.

பாதம் - கமனம, உபேந்திரன்

பாணி - தானம், இந்திரன்.

பாயரு - விசர்ச்சனம், மிருத்தியூ.

உபஸ்தம் - ஆனந்தம், பிரஜாபதி.

ஞாதுரு ஞானம் - அறிவு, பிர்மம்.

மனசு - சங்கல்பம், சந்திரன்.

புத்தி - நிச்சயம், பிர்மா.

சித்தம் - ஸ்மரணம், க்ஷேத்திரஞ்ஞன்.

அகங்காரம் - அபிமானம், உருத்திரன்.

தமஸு - குணத்திரயம், ஈஸ்வரன்.

ஆகத்திரயங்களை யாராய்ந்து நோக்கவும்.

(30) தூல சூக்ஷும காரணங்களாகிற தேகத்திரயங்களுக்குத் தேகத்திற்குள்பட்ட சுரோத்திராதி ஞானேந்திரியங்களும் வாக்காதியான கர்மேந்திரியங்களும், சப்தாதியான விஷயங்களும், மனசும் ஆக பதினறு விஷயங்களும், ஞானேந்திரியம், கர்மேந்திரியம், பஞ்சமகாபூதம், மனேபுத்திகளாகிற பதினேழும் கர்த்தா - கர்மம் - கிரியை - ஞாதுரு - ஞானம் - ஞேயம் - போக்தா - போகம் - போக்யமென ஒன்பது பதார்த்தங்களாகும்.

(31) ஒன்பது பதார்த்தங்களாவது—கர்த்தா - கர்மம் செய்கிறவன், கர்மம் நடந்து கொள்ளுதல், கிரியை - பண்ணவேண்டிய சங்கதி, ஞாதுரு - அறியத்தக்க புருஷன், ஞானம் - அறிவு, ஞேயம் - அறியவேண்டிய பொருள், போக்

தாவாவது - அனுபவிக்கத்தக்க புருஷன், போகமாவது-அனு பவம், போக்கியமாவது - அனுபவிக்கவேண்டிய பதார்த்தம். இந்த வொன்பதுவகை பதார்த்தங்களும் பஞ்சபூதமாயாமோக அகங்காரங்களாகிற அஷ்டவித பிருகிருதிகளு மறிந்து அதிக் கிரமித்து நின்றது தானென்று நிச்சயிக்கவேண்டியது.

(32) நானென்பது பூதங்களுமல்ல, குணங்களுமல்ல, பிராணனுமல்ல, மகாவாச்சரியங்களுடனே கூடிக்கொண்டிரு க்கிற விந்த மாயாப்பிரபஞ்சமு மல்ல வென்றும், மனோநிச்சய த்தை யடைந்து சலன மில்லாமலிருக்கவேண்டியது மன்றி யில், அந்த பிரகாரமனுஷ்டானமும் சுவானுபவமும் விரோ தப்படாமல் ஒற்றுமையா யிருந்தால் அவர்கள் முக்தியைய டைய வதிகாரியாவார்கள்.

(33) முக்தர்களாவது — நித்தியானந்தமும், நிர்சல மும், ஏகமும், நாநா ஜாக்கிரதையும், சாத்தியா சாத்தியமும், ஜனனமரண மில்லாமையும் - சாந்தமும் - சுகஸ்வரூபமும் - நிற்குணமும் - சுத்தபோத ஸ்வரூபமுமான நித்தியவஸ்துவெ துவோ அதுவே நானென்று நிச்சயித்து நின்றவர்கள் தான் முக்தர்களென்று சொல்லப்படுவார்கள்.

(34) சத்தியமும் ஞானஸ்வரூபமு மானந்தமுமான தெ துவோ அந்தவஸ்துவானதை வேதாகமங்களால் சொல்லப்படு வதே நித்தியானந்தஸ்வரூபமான ஆத்மாவாம், அதுவே நீயாம் அதுதான் நிச்சயம்.

(35) ஞானமென்கிறவறிவினாலே மோக்ஷமென்கிற வா க்கியத்தை யாதரவாய்க் கேட்டு, இந்த ஞானயோகத்தினாலே

திடப்படுதசென்று ஸ்ரீ சற்குரு மூர்த்தியானவர் இதுவே சாங்கிய ஞானமென்னும், சாங்கியயோகத்தைச் சொல்லி யினிமேல் தாரகயோகத்தைச் சொல்லுகிறார்.

(36) யோகப்பார்வை யாவது:— கண்களை மூடியாகிலும், அரைக்கண்பார்வையினாலே யாகிலும், மனோ திருஷ்டியினாலே யாகிலும் பிர்ம்மஸ்வரூபம்எவர்கள் காண்கிறார்களோ அவர்களே யோகப்பார்வை யுடையவர்களாம்.

(37) பிர்மதாரகமாவது—சந்திர சூரியர்களுடைய நடுவிலே ஸ்திரமான தேஜஸையுடைய தாரகங்களையும், தேஜோரூபமான பிந்து நாதங்களையும் ஒன்றுபடுத்திக்கொள்வது பிர்ம்மதாரகமாம். அதை யாவரும் அப்பியாசம் செய்தேவர வேண்டும்.

(38) இப்படிப்பட்ட தாரகயோகத்தில் பிர்ம்ம தெரிசனம் செய்ய நினைத்தவன் பகிர்லக்ஷியம் - அந்தர்லக்ஷியம் மத்தியலக்ஷியமாகிய மூன்று லக்ஷியங்களிலேயும் தன்னைக் காணப்படுகிறதும் காணப்படாததுமுண்டு. அது அப்பியாசத்தால் தான் சித்தியாகும்.

(39) மூன்று லக்ஷியங்களில் அந்தர் லக்ஷியமாவது— மூலாதாரத்திலிருந்து அக்கினிரூபமாய்ச் சந்திரப்பிரபையோடேகூடின் பிர்ம்மநாடியுண்டு. அதினுடைய மத்தியப் பிரதேசத்தில் கோடிமின்னல் பிரபையைப்போல் உளர்த்துவாம்ஸமாகத் திவ்வியதேஜஸுண்டு. அந்த தேஜஸானது தாமரை நூலுக்குச் சமானமாய்ப் பிரம்மரந்திரப்பரியந்தம்வியாபித்துச்

சர்வசித்திகளையும் கொடுக்கிறதாகவிருக்கும். அப்படிக்கொத்த தேஜோ மூர்த்தியை மனசினலே லக்ஷியம் பண்ணித் தியானிக்கவும்.

(40) இன்னும் வேறொருபிரகாரங்களையுஞ் சொல்லுகிறேன் கேள்— லலாடத்துக்குமேலே மண்டலத்துக்குள்ளே யிலக்ஷியம்வைத்து நக்ஷத்திரப்பிரகாசமான தேஜஸை மனோதிருஷ்டியால் பார்க்கவேண்டும்.

(41) இன்னொருபிரகாரம், தர்ஜனியென்கிறவிரலினலே செவிகளிரண்டையும் மூடினல் சிரசினுள்ள கும்பகமென்கிற பிரணவநாதங்கள் கேட்கப்படும்.

(42) மற்றொருபிரகாரம், நேத்திரங்களின் மத்தியத்தில் நீலஜோதிரூபத்தை லக்ஷியம்வைத்து பார்க்கவேண்டும். இந்தமட்டும் அந்தர்லக்ஷியங்களென்று சொல்லப்படும்.

(43) பகிர்லக்ஷியமாவது— நாசாக்ர முதற்கொண்டு வெளியேஅதோ முகமாக நாலு, ஆறு, எட்டு, பத்து பனிரண்டு முதலிய அங்குலங்கள் பிரமாணமாய் வைத்துக்கொண்டு கிரமமாக ஆகாசாதி பஞ்சதத்துவப்பிரகாரம் நீலவர்ணம் தாம்பிரவர்ணம் - இரக்தவர்ணம்-சுவர்னவர்ணம் - பீதவர்ணம்-முதலிய வர்ணங்களாகத்தியானம் பண்ணவேண்டும்.

(44) துவாதசாங்குல ஸ்தானத்தில் நிராகாரமானஜோதியை ஆகாசத்தி லக்ஷியமவைத்து ஸ்திரதிருஷ்டியினல் பார்த்த யோகீஸ்வரனுக்கு நேத்திரத்திற்கெதிரே கிரணங்களினுடனே கூடினஜோதியானது காணப்படும்.

(45) திருஷ்டிக்கு முன்னேயாகிலும் கடைக்கண்களி லேயாகிலும், நன்றாய்க்காய்ச்சின பொன்னிறம்போலே யிருக்கிற பூமியை இலக்ஷியம்வைத்துப் பார்த்தயோகீஸ்வரனுக்குத் திருஷ்டிஸ்திரப்படும்

(46) சிரசுக்கு மேலே துவாத சாங்குலஸ்தானத்திலுள்ள ஜோதியை லக்ஷியம்வைத்துப் பார்த்தால் மூர்த்தியை அடையலாம்.

(47) அப்பியாசயோகியானவன், எங்கெங்கே யிலக்ஷியம் வைப்பானோ அங்கங்கே ஆகாசலக்ஷியமானால், அவனுடைய சித்தமானது ஆகாசத்துக்குச் சமானமாகும்.

(48) மத்தியலக்ஷியமாவது— வெள்ளை முதலான வர்ணங்களைக் கிரமமாக அர்த்த சந்திரபிம்பமாகவும், மின்னல் கொடியைப்போலவும், அக்கினி ஜுவாலையைப்போலவும், பிம்பாக்கிருதியாகவும், ஆகாசத்தைப்போலவும் ஆத்துமாவைலக்ஷியம் வைத்துப் பார்ப்பது மத்தியலக்ஷியமென்று சொல்லப்படும்.

(49) இன்னொரு பிரகாரம்— நிராகாரமாய் நிஷ்களகுணரகிதமாயிருக்கிற ஆகாசத்தைப்போலவும்,அத்யந்தம் அந்தகாரரூபமான ஆகாசத்தைப்போலவும் காலாக்கினி சமானமான மஹாஆகாசத்தைப் போலவும், ஐக்கியகாந்தியோடு கூடின தத்வாகாசம் போலவும் சத ரவிக்குச்சமானமான சூரியனைப் போலவும் சொல்லப்பட்ட ஐந்து ஆகாசலக்ஷியமும் ஆகாச பஞ்சகலக்ஷியமென்று சொல்லப்படும்.

(50) இவ்வைந்து ஆகாசங்களும் உள்ளும் புறம்பும் சம்பூரணமாயிருப்பதை யிலக்ஷியத்தினலே பார்ப்பவன் ஆகாசத்துக்குச் சமானமாகுவன்.

(51) குரு சிஷ்யனிரண்டு பெயர்களையும் பவசாகரத்திலிருந்து கடக்கப் பண்ணுகிறதற்குக்கப்பல் போல் தாரகமாயிருத்தலினல், இந்த யோகத்துக்குத் தாரகயோகமென்னப்படும். இந்த யோகம் முந்தியே அப்பியாசம் பண்ணவேண்டியதாகையால் முதலில் சொல்லப்பட்டது.

(52) சாங்கியயோகம், தாரகயோகம் இவ்விரண்டுக்கும் நடக்கை வேறேயாகிலும் பலனென்றுதான். சாங்கியயோகமாவது உபாதியில்லாதது. தாரகயோகம் உபாதியோடே கூடிப் பிரயாசமாயிருக்குமென்று ஸ்ரீ குருமூர்த்தியானவர் சாங்கியம் தாரகமிரண்டையும் சிஷ்யனுகிய உனக்குப் போதித்ததன் மேல் அமனஸ்க இராஜயோகத்தைச் சொல்லப்போகிறுர்.

(53) இந்தப்படி அத்வைத - நாலாவது படலம் சம்பூரணம்.

நாலாவது படலம்

முற்றிற்று.

ஸ்ரீ பரப்பிர்ம்மணே நம:

# ஸ்ரீ குரு ரஹஸ்யோபதேசமெனும், புருஷார்த்த ஞானசிந்தாமணி நூல்.

## ரு-வது அமனஸ்க இராஜயோகப்படலம்.

அவதாரிகை:

ஸ்ரீ குருமூர்த்தியானவர் சிஷ்யனுக்கு அத்வைத யோகாப்பியாசங்களைப் பூர்த்திசெய்து மேலும் அமனஸ்க இராஜயோகத்தை உபதேசிக்கத்தொடங்கினார்.

(1) குருவுக்குகந்த சிஷ்யனே, அதிகரகஸியமாயும் சகல ஜோதிகளுக்கு மிருப்பிடமுமாயிருக்கிற மகத்தாகிய திவ்விய லிங்கமூர்த்தியைப்பார்க்கத்தக்கதான அந்தர் லக்ஷியம் எது வுண்டோ வதைச் சொல்லுகிறோம் கேள்?

(2) அப்படிக்கொத்த அந்தர் லக்ஷியமாவது உள்ளும் புறம்பு மிருப்பதாயும், அபரோக்ஷமாயும், ஆகாசத்துக்கு மந் திராகாசத்துக்குமத்தியமெது வுண்டோ அதுவே அந்தர் லக்ஷி யமாம்.

(3) அப்படிப்பட்ட அந்தர் லக்ஷியத்திலே மனசும் வாய்வும் ஒன்றுய்சேர்ந்து சலனமில்லாமல் தாரகங்களில் நிருத்தின யோகீஸ்வரன் ஜகத்குருவென்று சொல்லப்படுவான். இந்த லக்ஷியம் திடப்பட்டதே சாம்பவி முத்திரை யென்னப்படும்.

(4) உலகத்தில் யோகியென்ற பெயருடைய சிலர் மேற்சொன்ன முத்திரையை யறியாமல், பூசரிகேசரியைப்பிடித்து வைராக்கியத்தினலே நாக்கையறுத்துக்கொள்வார்கள். அது பிரயாசையேயல்லாமல் யாதொருபலனையுஞ்செய்யாது.

(5) தாலுமூலத்திற்கும் துவாதசாந்தத்திற்கும் மத்தியத்திலே பிர்ம்மகலையான தேஜஸுண்டு. அதில் மனசை நிறுத்தித தத்துவங்களைக்கிரமமாக ஹோமம் செய்யவேண்டும்.

(6) இந்தக் கிரமமானதில் முந்திய திருஷ்டி பிரதமையாகும். இரண்டாவது திருஷ்டி அமாவாசையாகும். மூன்றுவது திருஷ்டி பௌர்ணமியாகும். இந்தப்பௌர்ணமிமாதிருஷ்டியினலே நிர்மலமா யிருக்கிற ஜோதிலிங்கத்தை யிலக்ஷியம்வைத்துப் பார்க்கவேண்டும்.

(7) அதெப்படியென்றல் நாசிகாக்கிரத்திலே பார்வையை நிறுத்தி இமையால் மூடுவதும் திறப்பதுமில்லாமல் ஒரே பார்வையிலே யிலக்ஷியம்வைத்துப் பார்க்கும்போது தாலுமூல துவாதசாந்தத்திலே உள்ளும் புறம்பும்நிறைந்த இருளாகவிருக்கும். அந்த இருட்டில் மனம் சஞ்சலப்படாமல் சதாகாலமும் சிற்சொரூப லிங்கமூர்த்தியைத் தேடுகிற மனேதிருஷ்டியினல் திடமாகப் பார்த்துவந்தால் அப்போது அகண்டாகாரமாய்ப் பிர்ம்மரூபமாய் ஜோதீஸ்வரூபமாய்ச் சிவலிங்க ஸ்வரூபமாய்ப் பிர்ம்மதரிசனமாகும். அப்படிதெரிசனம் செய்யும் யோகிகளை மகாத்துமாக்களென் றறிந்துகொள்.

(8) சிஷ்யனே, மேற்குமுகமாய்ப் பின்னங்களில்லாமல் மண்டலாகாரமாக விருக்கிற ஆத்துமலிங்கத்தை நீகிழக்குமுகமாகவிருந்துகொண்டுபார். இது மகாவாச்சரியமாம்.

(9) இந்தப் பிரபையானது ஜோதிர்மயமாயும், சப்தப் பிரியமாயும், மோக்ஷத்துக்குச் சுகசொரூபமாயு மிருக்கிற விந்தவஸ்து யோகீஸ்வரராலேயும ரிஷீஸ்வர்களாலேயும், சித்தபுருஷாளாலேயும், சகலமான தேவாதிகளாலேயும் சதாகாலமும் தேடத்தக்கதாக விருக்கிறது. அதுதான் விஷ்ணு சம்பந்தமான பாமபதமென் றறிந்துகொள்.

(10) யோகீஸ்வரனுக்கு இலக்ஷியம் சாதனைப்பட்டால், தெரிசனமானது பூரணசந்திரபிம்பத்தைப்போலவும், மாணிக்கத்தீபம்போலவும், மத்தியானகாலத்திலிருக்கிற சூரியபிம்பத்தைப்போலவும், அக்கினி ஜுவாலையைப்போலவும் மின்னல் கொடியைப்போலவுமுள்ள வெகுவிதங்களான லிங்கஸ்வரூபமானது நேத்திரத்துக்குமுன்னே லக்ஷியபரந்தரத்தில் பிரகாசமாய்த் தோற்றப்படும். இதுவும் ஆச்சரியமாம்.

(11) இந்தப்பிரகாரமாக வாத்துமலிங்கத்தைத்தெரிசித்துவருகிற யோகீஸ்வரனுக்கு அன்னியகருமங்களாலே யொரு பிரயோசனமுமில்லை. ஆகையினாலே நீயும் ஆத்துமலிங்க தெரிசனம்செய்துகொண்டு உள்ளன்பு என்கிற புஷ்பங்களாலே அந்த ஆத்துமலிங்கத்தை மனோபூஜை பண்ணு.

(12) அஷ்டவித புஷ்பங்களாவன — இந்திரியநிக்கிரகம், பூததயவு, சமயஞானம், தியானம், தபசு, சத்தியம், இலக்ஷியம், தாரணை, ஆக அஷ்டபுஷ்பங்களாம். ஆகையால் இப்புஷ்பங்களாலே சித்லிங்கத்தை மனோதிருஷ்டியினாலே பூஜை செய்துவரவும்.

(13) இராஜயோகலக்ஷியமாவது—நேத்திரத்தில் இமையையுமூடியும் மூடாமலுமிருக்கிற ஒரேவிழிப்புள்ள திருஷ்டியும் கும்பகத்திலடங்கியவாயுவும் சர்வ சம்சயங்களுமில்லாத மனசுமுடைத்தா யிருப்பது இராஜயோக லக்ஷியமாம்.

(14) அஷ்டராஜயோகியானவன்—சிங்காடத்தில் மனசைநிறுத்தி, சந்திர சூரியகதியில்கூடித் திரிகோணமார்க்கத்தில் பிரவேசித்து அந்தர்லயமான வாயுவையும் பகிர் திருஷ்டியையும் நீக்கிலக்ஷியத்தில் நின்றுசந்திக்கப்பட்டவன் அஷ்டராஜயோகியாவன்.

(15) உன்னுடைய வந்தர் லக்ஷியபார்வையும் - அதில் காணப்படுகிற சொரூபதெரிசனமும மனசு மிம்மூன்றினுடையகூட்டுறவினலே பரசிவ மூர்த்திகரமாய் நீயுமாவாய் இது அதி ரஹஸ்யமான உன்மனீயந்தமான இந்தச் சிவராஜயோகத்தை நீயுமப்பியாசம்செய்வாய்.

(16) இன்னொருவிசேஷம் சொல்லுகிறோம் கேள்? சூரியப்பிரகாசம், மின்னல்கொடி, சிகை, பிந்து, நாதம், நக்ஷத்த்திரம், சூரியன், சந்திரன், தீபம், ஸுவர்ணபுஷ்பம், அதன் கேசரம், நவரத்தினம், இவைகள் ஆத்துமலிங்கத் தெரிசனத்தினல் காணப்படுகின்றன. நிரம்பவிசேஷமாம்.

(17) மற்றொருவிசேஷம்கேள்? மூலத்திலே பிராணவாயுவைநிறுத்திப் பூரித்து சூரியமண்டலத்திலே அபானவாயுவையேற்றிவைத்து இரண்டையும் ஸ்திரப்படுத்தித் தன்னுடைய கைவிரலகளாலே ஷண்முகீகரணம்பண்ணினல் முன்சொன்னவெகுவித பேதங்களாய்ப் பிரணவநாதத்திலே லீனமானசித்தமுடைய யோகிகள் ஆத்துமலிங்க விநோதங்களைக் காணமாட்டார்கள்.

(18) முச்சுடரின் விசேஷங்கேள்? சூரியன் சந்திரன் தீபம் இவைகளுக்கு எதிராகநின்று எதையாவது ஒன்றை லக்ஷியம்வைத்துச்சந்திரசூரியர்களாகிற இரண்டுநெத்திரப்பார் வையை யொன்றுபடுத்திப்பார்த்து ஈயஞக்கிரத்தில் புத்தியில் லாதபெயர்களுக்கு ஆத்மலிங்க விஷேதங்களைப் பிரகாசமாகக் காணப்படுவார்கள். ஆத்மஞானிகளுக்குத் தனக்குத்தானே ஆனந்தபோதங்கொண்டு லக்ஷியஸ்தலத்திலே ஒப்பற்றப்பிர காசத்தைக்கொடுக்கும்.

(19) பிரமாணம் பிரத்தியக்ஷமுள்ளதும் சாந்தமும் தேஜோமயமும் மஞேவாக்குக்கெட்டாததாகிய எந்தவஸ்துவு ண்டோ அதுவே பரப்பிர்ம்ம சொரூபமாகும்.

(20) சங்கல்பவிகல்பமில்லாமல் மகாஆச்சரியமான பர மயோகத்தை யெவனடைவானே அவனுக்கு உன்மனியவஸ் தையென்ற முத்திபதம் சித்திக்கும்.

(21) இதன்றி - ஆதாரமத்தியமாகிய இருதயஸ்தானத் தில் வியாபகமும் நாதபிந்துக்களுக்கும் அதீதமாகிய எந்தவஸ் துவுண்டோ அதுவே பிர்ம்மபதஸ்தானமென்று அறியவேண் டியது.

(22) இப்படிக்கொத்த பிர்ம்மபதமான துநிராசநிரயமும் நிர்மலபதமும் நிராமயமும் பாவஞரஹிதமும், அவ்வியமும், பரமசுகஸ்வரூபமும், மஞேதேகமுமான பரமதத்துவத்தை யெந்த யோகீஸ்வரன் சுத்தாசுத்த மனசிஞலே பஜனைபண்ணு வானே அவன் தன்மயஞய் நித்யானந்தபதத்தை யடைவான்.

(23) அப்படிக்கொத்த யோகீஸ்வரனுக்கு உண்டென் கிறதும், இல்லையென்கிறதும், அணுமாத்திரமாஞலுமில்லை.

உண்டென்பது பந்தம், இல்லையென்பது சூன்யம், ஆகையால் பாவாபாவங்களிரண்டையும் தள்ளவேண்டியது.

(24) பின்னையும் அஞ்ஞானிகளாக விருக்கப்பட்டவர்கள் - தியானம் செய்துவந்தும், இலக்ஷிய பாவாபாவமறியாமல் புத்தியில்லாதிருப்பதும் பார்வைத்திடப்படாமலிருந்து மிராதுமாய்ப் போவார்.

(25) ஜீவன் முக்தனானவன் அவர்களைப்போலே யிராமலக்ஷியத்தை கைவிடாமலும், ஆலஸியமாயிராமலும், சுழுப்தியவஸ்தையை யடையாமலும், சர்வமனோ சேஷ்டைகளையும் விட்டுவிடுவான்.

(26) தத்துவக்கியானியான யோகீஸ்வரன் சர்வாவஸ்தைகளையும் பிரயாசமில்லாமல் நீக்கி நிச்சய பாவசமான லக்ஷியத்தையடைந்து, அலையில்லாத சமுத்திரத்தைப் போலவும் காற்றில்லாத தீபத்தைப்போலவும் பிர்மாநந்தத்தில் அமிழ்ந்திருப்பான்.

(27) ஓய் பிர்மானந்த சிஷ்யனே' சர்வசாஸ்திரங்களிலேயும் வேதார்த்த முடிவாயும், மஹாரஹஸ்யமாயும் உடனே முக்தியைக் கொடுக்கிறதாயுமிருக்கிற சிவபூஜாவிதானத்தைச் சொல்லுகிறோம் கேள்? அதாவது:—சகலசிந்தனையுமில்லா திருப்பதே சிவத்தியானமாம்; சகலக்கிரியைகளில்லாமலிருப்பதே சிவபூஜையாம்; சலனமில்லாமலிருப்பதே பிரத்தியக்ஷமாம். ஸோஹம்பாவனைப்பண்ணுகிறதே நமஸ்காரமாம்; மௌனமாயிருப்பதே கீர்த்தனமாம், பரிபூரணபாவனையே ஜபமாம், கிருத்தியம் அகிருத்தியமில்லாம லிருப்பதே சிவமயமாம் சகலமும் சம்பூரணமாய் வசிக்கிறதே மோக்ஷமாமென்று சொல்லப்படும்.

(28) இவ்வெட்டு நிற்குணங்களும் அஷ்டாங்கபூஜையெ ன்று சொல்லப்படும்.

(29) சகலவிந்திரியங்களின் குணங்க ளில்லாமலிருப் பதாயும், சகலரூபங்களுக்கும் அதீதமான நிற்குணமாயும், நிரஞ் சனமாயும், சாந்தசுபாவமாயும, பாவபாவங்களுக்கு மெட்டாம லிருக்கிற யாதொருவஸ்து வவஸ்தையுண்டோ அதுவே யிச் சாவவஸ்தையென்று சொல்லப்படும். இது ஜாக்கிரதாதி யவஸ் தைச் சகஸ்திரத்தில் ஒன்றென்று சொல்லப்படும்.

(30) பிரவர்த்தனனவன் :—சகல துஷ்கர்மங்களைவிட்டுச் சுகக்கர்மங்களைப்பிடித்து ஸ்வர்க்க சுகத்தை யபேக்ஷித்த புருஷனவன் பிரவர்த்தனென்று சொல்லப்படுவான். அவ ன்சாக்கிரதாவஸ்தைக் கதிகாரியாக மாட்டான்.

(31) நிவர்த்தனனவன் :—இகலோகசுகத்தையும், பர லோகசுகத்தையும், பொதுவென்று மதிலபேக்ஷை யில்லாம லிருக்கிறவனும், சாக்கிரதாது யவஸதையி லிருந்துகொண்டு மோக்ஷசுக மடைகிறதற் கதிகாரியானவனும் நிவர்த்தனெ ன்று சொல்லப்படுவான்.

(32) சத்புருஷனவன் :—சம்சார சாகரத்தை எந்த விதம் கடப்பேனென்று சிந்தித்துக்கொண்டு ஸற்குருவைச் சேவித்துக்கொண்டிருப்பவனும், பெரியவாளுடைய சற்சங்க மும் அவர்களிடத்து லொன்றையு மபேக்ஷியாமல் நிராபே க்ஷையுடனிருப்பவனும், நல்லாசாரமும் சம்பூரணபாவனை யும் சாமத்வமௌனமும், வைராக்கியமும் வேதசாஸ்திரார்த்த நிச்சயமுமான புத்தியையுடையவனும், காமக்குரோதாதிகளா கிற சத்துருக்களைச் சம்மரித்து டம்பமில்லாமலிருப்பவனும் யாவத்து சத்குணங்களோடு சாக்கிரதாவவஸ்தை ஸ்பாவத் தோடு கூடின சத்புருஷனென்று சொல்லப்படுவான்.

(33) சாக்கிரதாவஸ்தையில் மரணத்தை யடைந்தவன் மறுஜன்மத்தில் பூர்வாப்பியாசவசத்தினுலே புனர்ஜென்மஞ் செய்து பூமியில் சொப்பனுவவஸ்தையை யடைவான.

(34) அப்படிக்குச் சொப்பனுவவஸ்தையை யடைந்த யோகீஸ்வரன் சமஸ்த லோக போக காமாதிகளியாவற்றை யுஞ் சொப்பனம்போலப் பார்த்துக்கொண்டு தன்சித்தத்திலே சரத்கால மேகம்போல சத்தாமாத்திரம் நின்று சஞ்சரிப்பான்.

(35) சுழுப்தியவஸ்தையை யடைந்த யோகீஸ்வரன் சமஸ்த லோகாத்வைதபாவத்தைப்போக்கிச் சாந்தத்தையே வகித்துப் பிரகாசசுபாவமாய்ச் சித்தாகியானந்த சூரியப்பிரகாச ரூபமாயிருந்துக்கொண்டு வசிப்பார்கள். அவர்கள் பகிர்முகத் தில் விருத்திகளுடனே கூடியிருந்தாலும் அந்தக்கரணத்தில் விருத்தியற்றவனுய்ச் சித்திரப்பிரதிமையைப்போல விளங்கிக் கொண்டிருப்பார்கள்.

(36) துரியாவவஸ்தையை யடைந்த யோகீஸ்வரன் தன் சுயசரீரத்துடனிருந்தாலும் மனோநிவிர்த்தியையடைந்து சாந்தமாயும், அஹங்காரங்களில்லாமல் கந்தாதிகுணங்களில் லாதவனுயும் பாபரகிதனுயுமான ஜீவன்முக்தியை யடைந்தி திருப்பான். பின்னும், அந்த யோகீஸ்வரன் சமுத்திரமத்தி யில் வைத்த நீர்க்குடம்போலவும், ஆகாசத்தில் நிறுத்தின சூரி யகும்பம்போலவும் உள்ளும் புறம்பும் கிரமமாக பூரணபாவ மும் சூன்யபாவமும் அடைந்து சித்திரதீபத்தைப்போலவும் விளங்கிக்கொண்டிருப்பான்.

(37) துரியாதீத வவஸ்தையையடைந்த யோகீஸ்வரன் பாஹ்யத்தில் உலகங்களிலே பிர்ம்மாவென்றும் விஷ்ணுவெ ன்றும் சிவனென்றும், பிரகிருதியென்றும், புருஷனென்றும்

காலனென்றும், அரூபனென்றும் நானாவித விகற்பங்களை வாயால்பேசிக்கொண்டு தேகத்தோடே கூடியிருந்தாலும் அந்த யோகீ நித்தியமுக்தனாய் மஹத்துவங்களை யடைந்த ஜீவன் முக்தனாய்ச் சுகித்துக்கொண்டிருப்பான். ஆகையால், நீயும் சகலபிரயத்னங்களாலே கிரமமாக வப்பியாசம்பண்ணி யிந்தத்துரியாதீத வவஸ்தையையடைந்து சுகத்தை யடைவாய்.

(38) சகலா வஸ்தையை யடைந்திருந்தாலும், சகலா வஸ்தையை மறந்திருந்தாலும் உள்ளும் புறம்பும் வியாபகமான சகல சங்கைகளையும் நீ விட்டுவிடு.

(39) அன்னிய கர்மங்களை யறியாமல் சகலமும்விட்டுவிட இந்த சிவயோகத்தை யப்பியாசம்பண்ணு சகஜமாய் அபின்னமயமான அமனஸ்கமென்கிற முத்திரையை நீயடைவாய்.

(40) ஆத்மாவையும் பிந்துவையும் ஆகாசமாகச் சேர்த்து இவ்விரண்டையும் சமாசப்படுத்தின தெதுவோ வது தான் அமனஸ்கயோகமென்னப்படும்; அதையே கேசரியாவஸ்தையென்றும், உன்மனீயவஸ்தையென்றும், மனோன்மனீய வஸ்தையென்றும், அஜவடிவுநித்திரையென்றும் பலநாமங்களாகச் சொல்லப்படும்.

(41) பின்னும் சாக்கிரசொப்பனங்களை யதிக்கிரமித்துச் சனனமரணங்களில்லாமல் பரப்பிர்ம்ம ரூபமாய்ச் சுப்பிரமான விந்த அமனஸ்கமென்கிற முத்திரையை யெப்போது அடையப்போகிறோமென்று கேட்ட சிஷ்யனுக்குக் குரு மூர்த்தியானவர் வேறொருவிதமாக மனோவிருத்திசொல்லுகிறார்.

(42) ஆகையினாலே உன்மனசைப் போகவிடாமல் அங்கங்கே அதைநிறுத்தியது காரணமாகவே மனோலயமடையவேண்டும். அந்தமனசை அப்படிவிடாமல் நிறுத்தினால்விஷய விருத்தியாம்.

(43) ஒவ்வொரு யோகியும் தம்மனசை பிராணவாயுடன் சேர்த்துவாசிவழிப்போக்கிலே விட்டால் அது எதேச்சையாய்த் திரிந்துவிட்டு தானே திரும்பிவந்து யதாஸ்தானத்தில் நிற்கும். அது எப்படியோவென்றால் மதங்கொண்ட யானைபாகனுக்கும் அங்குசத்துக்கும் உட்படாமல் மீறி யதேச்சையாய்த்திரிந்து பிறகு தன்பாட்டிலே திரும்பிவந்து யதாஸ்தானம் சேர்ந்தாப்போலென் றறிந்துகொள்.

(44) இலயத்திலே சிரேஷ்டமானது நாதலயமாம். முத்திரையில் சிரேஷ்டமானது கேசரி முத்திரையாம். யோகங்களில் சிரேஷ்டமானது நிராலம்பயோகமாம். அவஸ்தைகளில் சிரேஷ்டமானது மனோன்மனியாம்.

(45) இராஜயோகத்திற்குச் சக்திரூபமானவிந்தமனோன்மனி முத்திரையையடைந்த யோகீஸ்வரன் பால உன்மத்த பிசாசங்களைப்போல சகல லோகங்களிலேயும் சஞ்சரித்துக் கொண்டிருப்பான்.

(46) மந்திரயோக இலயயோக மிவ்விரண்டும் ஆரம்ப யோகங்களாம. ஹடயோகமானது அப்பியாசயோகமாம். இராஜயோகமானது மோக்ஷசித்தாந்தமென்று சொல்லப்படும். ஆகையினாலே ஜீவன் முக்திக்கு இந்தயோக மிருந்த நல்ல மார்க்கமாம். இதைத்தவிர வேறுமார்க்கமில்லை. இது மோக்ஷப்பிரதானமாய் ஸமஸ்த வர்ணாஸ்ரம ஜனங்களுக்கும் சம

மதமானதென்று நிச்சயித்தை யடைந்த ஜீவன்முக்தர்களால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.

(47) யோகீஸ்வரன் மோக்ஷமடைவதற்காக விந்தஇராஜயோகமார்க்கத்தைத் தானே யப்பியாசம் செய்துகொண்டுவரவேண்டியது. இந்தயோகத்துற்கு விக்கினங்களானவை:— ஆலசியம், துர்ஜனசஹவாசம், புத்திரமித்திரபந்துக்கள், இராஜ விரோதம், சாஸ்திரவிசாரணையில்லாதிருப்பது, சரீரரோகம், இவைமுதலானவைகளிருலே யோகவிக்கினங்களுண்டு. இவைகளையெல்லாம் ஜெயித்து இந்த மஹாயோகாப்பியாசத்திருலுண்டான அணிமாதி யஷ்டைஸ்வரியங்களும் காயசித்திகளும் மேன்மேலுண்டாகும்படி செய்துகொண்டாலும் கொள்ளலாம். நிச்சயத்தையடைந்து விட்டுவிட்டாலும் விடலாம்.

(48) இந்தப்படி இராஜயோகாப்பியாசம் பண்ணின மகாத்துமாக்களுக்குத் தாபத்திரயங்களும் நவவித பதார்த்த விவாதங்களும் சித்து ஷட்ரசங்களும் பஞ்சகோசங்களும், ஷட்பாவவிகாரங்களும் இவைமுதலானவைகளிலே லேச மாத்திர மாசை யில்லையாம்.

(49) ஞானக்கினியானது க்ஷணமாத்திரத்திலே, புண்ணியபாவமிரண்டையும்தஹித்து அதன்பேரில் இராஜ யோக சித்தியை யடையச்செய்யும். இப்படி சித்தியை யடைந்த மகாத்துமாக்கள் முக்தர்களாவார்கள்.

(50) அகண்ட சூரியன் மகத்தாகிய விருட்டை யெப்படி போக்குவானே அப்படி இராஜயோகசமாதியானது சுபாசுப கர்மங்களியாவற்றையும் போக்கிவைக்கும்.

(51) இந்த இராஜயோகத்தை யப்பியாசிக்கத்தொடங்கி யோகசித்தியை யடையுமுனனே கர்ம்மசரீரம் விழுந்துவிட்டால், அவன், சிவலோகத்தையடைந்து வெகுகாலம் பிர்ம்மானந்தசுகத்தி லிருந்தபிறகு பூமியிலே ஐஸ்வர்யவானாயும், வெகுசாஸ்திர சம்பன்னனாயும், யோகீஸ்வரனாயும், சத்புருஷாளுடைய வம்சத்தில் அவதாரம்செய்து பூர்வ ஜன்ம சுகிர்தத்தாலே புனஹா இந்த இராஜயோக வனுஷ்டானத்தைச் சம்பூரணமாய்ச் சாதித்து முக்தனாவான்.

(52) இந்தப்படி இராஜயோகத்தினுடைய ரஹஸியார்த்தத்தில் மனசைச்செலுத்திப் பிர்ம்மத்தில் லீனமாக்கினவருடைய தாய்தந்தையர்கள் கிருதார்த்தரானவர்களாம்; அந்தவமஸத்தில் ஜன்மித்தவர்களும் புண்ணியபுருஷர்களாம். அப்படிக்கொத்த யோகீஸ்வரராள் சஞ்சரிக்கு மிடங்களெல்லாம் மகா புண்ணியபூமியென்று சொல்லப்படும்.

(53) சிவயோக ரஹஸியங்களையும் அதின் மகத்துவங்களையும், கைபாகம் தீக்ஷாபாகம், அனுஷ்டானம், ஸ்வானுபவம், மனோலயம், சமாதி, பிரத்தியக்ஷதெரிசனம், பூர்ணபாவ ஐக்கியம், சமத்வம், இவையெல்லாம் சற்குருகடாக்ஷத்தினாலே யடையவேண்டியதென்று சிஷ்யனுக்குப்போதித்து, இந்தகிரந்தசொரூபத்தைச் சொல்லத்தொடங்கினார். சகல சாஸ்திர ரஹஸியார்த்தங்களும் சித்துபுருஷாளுடைய சித்தாந்த மார்க்கமுஞ்சோதித்து வேதாந்த சித்தாந்த யோகாந்தமாக விந்நூல் செய்துமுடிந்தது.

(54) இந்தச் சிவயோகதீபிகையென்ற குருவுபதேசபுருஷார்த்த ஞானசிந்தாமணி நூலானது மஹாரஹஸியமாகவிரு

க்கும். இது யோகஅப்பியாசிக்கிறவனும், வைராக்கிய மனசை யுடையவனும், ஜீவசொரூபத்திலும் சற்குருவிடத்திலும், உண்மையான பக்தியும்நிச்சயப்புக்தியுடையவனும் சத்தி யவசனியாயும் இருக்கிற சத்புருஷனுக்குக் கொடுக்கத்தக்கது.

(55) விவேகமும் ஞானபக்தியும் சததியமு மில்லாத பாமரர்களுக்குக் கொடுப்பார்களாகில் குருததுரோகிகளாவார் கள். வாங்கிக்கொண்டவர்களும், மஹாசங்கடங்களுடனிருக் கிற ரௌரவாதியில் அழுந்தி கர்ப்பரோகங்களில் வாதனையை யுமடைவார்.

(56) ஆகையால் சிஷ்யனுடைய பரிபக்குவம் செவ்வை யாகவறிந்து ஸ்வாநுபோகத்தை மனப்பூர்வமாய் உபதேசித் திந்நூலைக் கொடுக்கத்தக்கதாம்.

(57) இந்தப்படி அமனஸ்க இராஜயோகமான ஐந்தா வது படலம் சம்பூரணம்.

வாழி வெண்பா.

சித்தரெலாம் வாழ்ந்திடுக சிவரட் சார்த்த சபைப்
பத்தரெலாம் வாழ்ந்திடுக பார்மிசையி - லெத்திக்கு
மந்த்ர புருஷார்த்த மன்னுசிந் தாமணிநூல்
விந்தையுடன் வாழ்ந்திடுகவே.

புருஷார்த்த ஞானசிந்தாமணிநூல் முற்றிற்று.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.

உ

## ஜீவரக்ஷார்த்த சித்தர்சபை மடாலய

# பதினெண்சித்தர் துதி.

### விருத்தம்.

திருவருட் சிவஞான மெய்யன்ப ரமலமன-தேயெனத்தி
கழ்பொன்மன்றிற், றிரு ம விற்றமை  தொழின்மருவு சிவ
பிரான்-றில்லையிற்றிருமூலர் ற்,செய ன்மருவுசோலைமலையென்
றுரைசெயழகர்மலை-சேர் தவரிராமதேவர், தென்பொதியை
ோர்தருமனந்தசயனத்தினிற்-செந்தமிழ்க்கும்பமுனிவர், அரு
ணையிலிடைக்காடர்தென்பரங்கிரிவாச-ரருளையமச்சமுனிவ,
ரற்புதவயித்தீசர் கோயிலிற்றன்வந்திரி - யாரூரர்கமலமுனிவ,
ரன்னவயல்சூழெட்டியங் குடியில்வான்மீகி-பண்பழனிபோகர்
சேது, வதினந்திமாமுனிவா திருவரங்கத்திலா-ரழகுமலிசட்
டைமுனிவர், தருவளங்கொண்டதிரு வேங்கடங்கொங்கண
வர்-தணிகையிற்கருவூரர்முத், தமிழ்மணப்பூம்பொய்கை செறி
தறு துவாதசாங் - தத்தலமெனுங்கூடலிற், றகுசுந்தரானந்த
ரொடுமெற்ற முனிவரர்கள் - சார்ந்துளாரென்றுரைகதுஞ், சம்
பந்தமோர்ந்தும்மை மபந்தரங்கமிகு - சற்சனர்கள்வாழ்சென்
னையில், வருசீவரக்ஷார்த்த சித்தசபைவளரகத்-தியகூடமதனி
னீவிர், வைபவச்சித்தாட லதுபுரிந்தருசமயம்- வாழ்தரவொ
ளுநீடி, வளர்திருவருட்பெருமை வையகந்துதிசெய்ய - மகிழ்
வினருள் புரிதியொன்றே, வந்தித்திறைஞ்சி நனிசித்திக்கணுதி
பணை-வாஞ்சிக்[illegible]